# சுந்தரகாண்ட விமர்சனம்



ஸாஹிதீ வல்லப ஸாரஸ்வதஸாரக்ஞ
**தி. சுந்தராசாரியார்**

# சுந்தரகாண்ட விமர்சனம்

ஸாஹித்ய வல்லப ஸாரஸ்வதஸாரக்ஞ
தி. சுந்தராசாரியார், B.A., B.L.

கல்வி பிரசுராலயம்
3, கோபதி நாராயணஸ்வாமி ரோட்,
தியாகராயநகர், மதராஸ்

# முகவுரை

**மந்த்ரம், தூதம், ப்ரயாணம், ஆஜீ, நாயகாப்யுதயம்** என ஒரு மஹா காவ்யத்திற்கு உரியனவாய் சொல்லப்பட்டிருக்கும் ஐவகை சந்திகளில் இரண்டாவதாக உள்ள 'தூதம்' என்பது சுந்தர காண்டத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இச் சுந்தர காண்ட ச்லோகங்களிலுள்ள சொற்சுவை, பொருட் சுவை இவைகளை விரிவாக விமர்சனம் செய்து கூறுவதென்றால் ஆயிரக் கணக்கான இதழ்கள் அடங்கிய புத்தகங்கள் அநேகம் எழுதலாம். உதாரணமாக,

राज्यं वा त्रिषु लोकेषु सीता वा जनकात्मजा ।
त्रैलोक्यराज्यं सकल सीताया: नाप्नुयात् कलाम् ॥

என்பதை எடுத்துக்கொள்வோம். அநுமான் சீதையைப் புகழ்ந்த அநேக ச்லோகங்களில் இது ஒன்று. முதலில் இதிலுள்ள கவிச் சித்திரத்தை சுருக்கக் கருதுவோம். ஜனகாத்மஜை என்ற விசேஷணத்துடன் கூடிய சீதையை ஒரு தட்டிலும், மற்றொரு தட்டில் மூவுலகங்களில் எதையேனும் ஒன்றை ஆளும் செல்வத்தையும் இட்டுப் பார்க்கும்போது, சீதை உள்ள தட்டு கொஞ்சமேனும் உயர எழாமல், மற்றொன்று மட்டும் மிக உயர இருந்தது. ஜனகாத்மஜை என்ற விசேஷணத்தை எடுத்துவிட்டு, மூவுலகங்களை முழுவதையும் ஆளும் செல்வங்கள் எல்லாவற்றையும் சேர்த்து தட்டாக்கினபோதும் சீதையினுடைய பதினாறில் ஒரு அம்சத்திற்கு கூட அச்செல்வங்களனைத்தும் நிறை நிற்காமல் போயின. மூவுலக ஆட்சியைவிட சீதை அநேக மடங்கு உயர்வு பெற்றிருந்தாளென்றால் பிரிவாற்றாமையால் அவள் பட்ட துயரங்களுக்கு இலக்காக உள்ளவர் ஈச்வரனாகவே இருத்தல் வேண்டும் என்ற பொருளும் இங்கு த்வனியாக விளங்கும். ஆத்மைச்வர்யமே உருக்கொண்டதுபோல உள்ள கற்பரசியான சீதைக்கு [illegible] கொடுப்பதற்கு பூர்ணைச்வர்யம் எவ்வளவாயினும் போதாதென்னும் தத்துவமும் இங்கு குறிப்பாக உள்ளது. இவ்வாறு ரஸமுள்ள யோஜனைகளை இந்த ஒரு ச்லோகத்திலிருந்து

புலப்படுமேயானால், இத்தகையாயுள்ள சுலோகங்கள் ஸர்க்கங்கள் தோறும் காணப்படும் அதிசயமுள்ள இககாண்டத்தை விரித்து விமர்சனம் செய்வது எவ்வாறு? ஆயினும் ராவணன் கொண்ட லக்ஷ்யமென்ன? ராமன் அவனை அடக்குவதற்கு ஏதுவாய் நின்றது எது? ஸீதையின் பர்த்தா என்பதால் அவருக்குள்ள ஏற்றம் எவ்வகைப்படும்? அனுமானுடைய ப்ரம்மசர்யமும், ஸீதையின் பாதிவ்ரத்யமும் ஒன்றை ஒன்று கண்டு எவ்வாறு பரிபூர்த்தி யடைந்தன? ஸீதை சிறையிருந்ததால் உலகம் எவ்வாறு நன்மை பெற்றது? என்பது போன்ற சில முக்கிய அம்சங்கள் புலப்படுமாறு இதை நான் எழுதத் துணிந்தேன். இதற்கு முன் என்னால் ஆங்கில பாஷையில் எழுதி வெளியிடப்பட்ட ‘Studies in the Ramayana’ என்ற பெயருள்ள பாலகாண்ட விமாசனத்தை நண்பர்களும, அறிஞர்களும வரவேற்று நன்கு பாராட்டியதும் இதை நான் எழுத ஏற்பட்டதற்கு ஒரு காரணமாகும். தமிழ் மக்கள் பலரும் படித்து எளிதில பொருள் காணும் பொருட்டு நான் இதைத் தமிழிலே எழுதலானேன்.

இப்புத்தகத்திலடங்கியவை சென்ற வருஷத்தில் தினமணி பத்திரிகை வாரப் பதிப்புகளில் முதன்முதல் வெளியிடப்பட்டவை. அப்பத்திரிகையின் உரிமையாளர்கள் தந்த அன்பார்ந்த அனுமதியைப்பெற்று தனிப் புத்தகமாக இதை நான் பிரசுரித்திருக்கிறேன். அவர்களுக்கு நான் மிகவும் கடமைப் பட்டவனாகிறேன்.

जनकसुतापवनात्मज पावनचरिताञ्चितस्य काण्डस्य ।
सुन्दरनाम्नो व्यमृशं सुन्दरनामा रसोक्तिपरिपाटीम् ॥
प्रणयिप्रियानुरोधात् अथवादिकविप्रबन्धबहुमानात् ।
सन्तः परगुणलुब्धाः ममापि वाचो हृदाभिनन्दन्तु ॥

ஸ்ரீ. சுந்தராசாரி

## முன்னுரை

॥ श्रीः ॥

यावत्स्थास्यन्ति गिरयः सरितश्च महीतले ।
तावद्रामायणकथा लोकेषु प्रचलिष्यति ॥

என்று ப்ரம்மதேவன் அருளியதுபோல் இலக்கியவுலகிலேயே வேறெந்தக் குறியும் இவ்வளவு உண்மையுடன் நிலைத்துப் பலித்ததில்லை. காலதேச வரம்புகளைக் கடந்து இன்றும், எங்கும் சிறப்புற்று நிற்பது நம் ஆதிகாவ்யம். மலைகளையும் கடல்களையும் கடந்து கிழக்கிந்திய நாடுகளிலும், தீபாந்தரங்களிலும், ராமாயணம் வழங்கி வந்தது. கம்போடியாவென்ற கம்புஜதேசத்திலும், யவத்வீபத்தில் பராம்பணன், பனதரன் என்ற ஸ்தலங்களிலுமுள்ள கோயில்களில் ராமாயணக் கதை முழுதும் சிற்பமாய் சித்திரிக்கப்பட்டிருக்கும் அதிசயத்தை இன்றும் காணலாம். நம் பாரதநாட்டிலே பண்டைகாலந்தொட்டு ராமன் கதையை பொதுமக்களுக்குப்பாடி, எடுத்துரைப்பதற்கான கல்வெட்டுகள் காணப்படுவது விந்தையல்ல; கம்போடியா என்ற கம்புஜ தேசத்தில் ஸ்ரீ ஸோமசர்மன் என்பான் கி. பி. 600 ஆம் ஆண்டில் அங்குள்ள கோயில் ஒன்றிற்கு மஹாபாரதம், புராணம், ராமாயணம் மூன்றையும் அளித்து, அவற்றை ப்ரவசனம் செய்யவும் ஏற்பாடு செய்தான். அந்த ப்ராந்த்யத்திலேயே சம்பா ராஜ்யத்தில் ஏழாம் நூற்றுண்டில் ப்ரகாசதர்மன் என்ற அரசன் நம் தாய்நாட்டில் இல்லாத ஒரு அருமையைச் செய்வித்தான். ஆதிகாவ்யத்தை இவ்வளவு போற்றும் நம் நாட்டில் 'ஆதிகவி'க்கென ஒரு கோயில் உண்டோ? இல்லை. ஆனல் சம்பாவில், ட்ரா-கியன் என்ற இடத்தில் ப்ரகாசதர்ம மஹாராஜன் வால்மீகிக்கு ஓர் கோயில் எழுப்பித்த அழகை ஒரு கல்வெட்டில் காண்கிறேம். இன்று யவத்வீபத்தில் மகம்மதிய மதத்தைத் தழுவிய பின்னும் மக்கள் ராமாயணக் கதைகளை நாடகமாயும் நடனமாயும் நடித்து வருகின்றனர்.

மேனுட்டு நாகரீக இலக்கிய வெள்ளத்தில் நமது தேசீயக்கலை, பண்பாடு, நூல், வழக்கம், ஒழுக்கம் எல்லாமே மூழ்கிக்கிடக்கும் இந்நாளிலும், தன் வசீகார

சக்தி குன்றாமல் ராமாயணம குனறுபோல் நினறு வரு கிறது என்பதற்கு மஹாத்மா காந்தி யொருவரே பேர்து மான அத்தாட்சி. 'நீ மருந்தைத் தேடுவதிலிருந்து உனக்கு ராமநாமத்தில் நமபிக்கை போய் விட்டது என எனக்குத் தோன்றுகிறது' என்று தம் சிஷ்யைக குறைத்து, 'ஹா, ராம, 'ஹா, ராம' என்று உயிர் நீத்த இமமகாத்மாவை விட பெரிய ராமாயணத் தொண்டாற்றி யவர் யார் உண்டு? இவர் கடைசிவரைக்கும பாரத நாட்டில் தாம நிலைநாட்ட விரும்பிப் பாடுபடடு வருவ தாகச் சொல்லிக்கொணடிருந்தது ராமராஜ்யமே. ராம ராஜ்யம் என்றால் அஹிம்ஸா ராஜ்யம் என்று வால்மீகி உரைசெய்திருப்பது கவனிககத் தககது.

रामभेवानुपश्यन्तो नाभ्यहिंसन् परस्परम् ।

இநத ராமாயணத்தை முனகாலததிலிருநது ஸம்பிர தாயமாய் ஊர்தோறும் பல வித்வானகள சொலலி வரு கிறார்கள. புதுப்படிபபேறிய புத்திகளுக்கு ருசிககுமாறு சிலர் நவீனமுறையிலும சொல்லி வருகிறாரகள. இபபடிப் புது முறையில் ஸமீபகாலத்தில் ராமாயணத்தைத் தொடர்ச்சியாய அதிகமாக எடுத்துரைத்தவர்களில் மூனறு பேர்களை முககியமாய சொல்லவேண்டும்: காலம் சென்ற மஹா கனம வி. எஸ். ஸ்ரீநிவாஸ சாஸதரிகள, ஸ்ரீ ஆர். நாராயண அய்யர், ஐ. ஸி. எஸ். (ரிடயாட்), ஸ்ரீ ஸாஹிதீவல்லப, சீர்காழி தி. ஸுந்தராசாரியார். மஹாகனம் சாஸ்த்ரியார் சென்றது தர்ம நெறி ஒழுகக மார்க்கம்; ஸ்ரீ நாராயண அயயர் கையாளுவது யுக்தி, கதையின் யந்திரமபோலுள்ள அமைப்பின அழகை ஆராயும புத்தி; ஸாஹிதீவல்லபரோ எல்லாவறறையும் பறறிய தான ரஸ பத்ததி, காவய வழி; ஆதிகவி ஆதிகாவ் யஙகளின் ஆச்சரியமான சமத்காரததை விளக்கும் சுவைக்கலை. இம மூவர்களுடைய தனிபபட்ட வழிகளை முறையே ஆஙகிலத்தில் 'the moral, the intellectual and the aesthetic approaches என்று சொல்லலாம்.

ஸ்ரீ ஸாஹிதீவல்லபரின் ஸமஸ்கருத இலக்கிய உபந் யாஸஙகளைக் கேட்டிரா ரஸிகர்கள சிலரே; ராமாயணம, பாரதம், பாகவதம், காளிதாஸர் முதலிய கவிகளின் காவ் யஙகள இவவளவையும் முகஸ்தமாய்வைத்துக்கொண்டு,

நல்ல கல்பனையுடன், சுவைததும்ப அவர் பேசுவதைக் கேட்பது ஒரு பெரும் ரஸானுபவம் என்றே சொல்ல வேண்டும். அவர் ஒரே இடத்தை பலவிடங்களில் பல்வேறுபட்ட சமத்காரங்களுடன் சித்திரிப்பதைப் பார்த்தால், அவர் உரை செய்வதும் ஒரு கலை என்றே கொள்ளல் வேண்டும்.

ஸுந்தரகாண்டம் ராமாயணத்திற்குள் மிகவும் முக்கியமானதென்று விசேஷமாய் எடுத்துச் சொல்ல வேண்டியதில்லை. இக்காண்டத்தின் பெயரே ஒரு புதிர். சில ஆராச்சியாளர் ராவணனின் லங்கை தற்போதைய ஸிலோன் தீவு அல்ல; கிழக்கிந்தியத் தீவுகளிலுள்ள ஸுந்தாத்தீவுகள்தான் என்றும், அந்த ஸுந்தாத்தீவுகளைக் கொண்டு வந்தபெயர் ஸுந்தரகாண்டம் என்றும் சொல்லுவர். இங்கே ஸ்ரீ ஸுந்தராசாரியார் ஆலங்காரிகர்களின் ரஸபரிபாஷையை யொட்டி அப்பெயருக்குப் பொருள் விளக்கியிருக்கிறார்.

இந்த ஸுந்தரகாண்டத்தின் கதைப்போக்கை ஆங்காங்குள்ள நுணுக்கங்களின் விளக்கத்துடன் ஸ்ரீ ஸுந்தராசாரியார் இங்கு தந்திருக்கிறார். இந்நூலிற்குப் போதுமான ஆதரவு ஏற்பட்டால் இவ்வாசிரியரின் மற்ற ஆராய்ச்சிகளும் சுவையுரைகள் பலவும் வெளிவர உதவியாயிருக்கும். அவ்வாதரவை ரஸிகர்கள் அளிப்பார்கள் என்று நம்புகிறோம்.

ராமாயணம் என்பது நம் மனதிற்குள் எப்போதும் ஓடிக்கொண்டிருக்கும் ஓர் அந்தர் வாஹினியான ஸரஸ்வதி; ஊற்றுப் பெருக்குள்ள ஆற்றின் மணலைப் போல கொஞ்சம் கிளறிவிட்டதும், ராமாயண ரஸம் உள் ஊற்றிலிருந்து பெருகி, உடலையும் ஆத்மாவையும் அப்பெருக்கால் முழுதும் நனைத்து, அழுக்கைப் போக்கி, உய்யவைக்கிறது.

एवमेतत् पुरावृत्तमाख्यानं भद्रमस्तु वः ।
प्रव्याहरत विस्रब्धं बलं विष्णोः प्रवर्धताम् ॥

வே. ராகவன்

# பொருளடக்கம்

ஸ்ரீ

# சுந்தர காண்டம்

ஸ்ரீ ராமாயணம் என்பது ஒரு வகுப்பு அல்லது ஒரு தேசத்து மக்களுக்காக அவர்களுடைய ஆசார அனுஷ்டானங்களை உணர்த்துவதற்கோ, விதிப்பதற்கோ எழுதப்பட்ட சாஸ்திரமன்று; மகா பாரதத்தைப்போல் இதிஹாஸம்* என்று இதைக் கொள்வதும் அவ்வளவாகப் பொருந்தாது. அறம், பொருள், இன்பம் இம்மூன்றுமே இதில் பிரஸித்தமாகப் பேசப்படுகின்றன. லக்ஷ்மணனும் சீதையும் ராமனுடன் இணைபிரியாது அவரே தங்களுக்குத் தஞ்சம் என்று அவரைப் பின்பற்றுவதுபோல், பொருளும் இன்பமும் தர்மத்தைத் துணையாகக்கொண்டு செயல் நடத்துவது இனிதென்பது இப்பிரபந்தத்தின் சாராம்சம். ராமாயணம் முழுவதும் சீதையின் பெருங் கதையைப் பாடும் காவ்யம் என்றே தொடக்கத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அவர், இவர் என்னும்படி யாவருடைய செவியையும் மனத்தையும் கவரும் தன்மை வாய்ந்ததென்று ஆக்கியவர் இதற்கு ஆசி கூறியிருக்கிறார். அவ்விதத் தன்மையாய், அல்லது பொதுவுடைமையாயிருத்தல் மஹா காவ்யங்கள் யாவற்றிற்குமே இன்றியமையாததான இலக்கணம்.

---

* ஸ்ரீ ராமாயணத்தை இதிஹாஸச்ரேஷ்டம் என்று கூறுவார் லோகாசாரியார். ஆனால் ஸ்மிருதிகளில் பாரதம் மட்டுமே அவ்வாறு கூறப்பட்டுள்ளது.

காவ்யம் எவ்வாறே, அவ்வாறே அதைப் படைத்த கவியின் பரந்த நோக்கமும். அதை விளக்குவதற்கு அவர் அருளிய பாசுரமொன்றே போதுமானது: 'மனிதனிடம் மட்டுமல்ல, மற்றெல்லாப் பிராணிகளிடத்தில்கூட, சாதுத் தன்மை, அறவழி நடத்தல், ஆற்றல் புரிதல், பிறரைக் காக்கத் தம்முயிர் துறத்தல் இவை நன்கு காணப் படுகின்றன' என்பது அப்பாசுரப் பொருள். ஜடாயு என்னும் கழுகைப் புகழ்ந்த பாசுரமது.

இத்தகைய மேன்மைபெற்ற ஆதிகாவ்யமான ஸ்ரீ ராமாயணத்தில ஐந்தாவது பிரிவாக உள்ளது சுந்தர காண்டம். மற்ற காண்டங்களுக்கு ஏற்பட்டிருக்கும் பெயரின் பொருளைப்போல் இக்காண்டப் பெயரின் பொருள் எளிதில் அறியக்கூடியதாக இல்லை. ஒரு வேதத்தின் பொருளை உள்ளபடி அறியாததே வேதங்கள் பலவாக ஆனதற்குக் காரணம் என்று வியாஸர் சொல்லியிருப்பதுபோல், இங்கும் ஒரு பொருள் விளங்காத இப்பெயருக்குப் பலரால் பல பொருள்கள் கூறப்பட்டிருக்கின்றன. **நஷ்டலாபஸ்து சுந்தர:** என்று நிகண்டு ஒன்றைச்சொல்லி, காணமற்போன சீதையை அனுமான் கண்ட வரலாற்றை வருணிப்பதால் இக்காண்டம் சுந்தர காண்டம் என்று பெயர் பெறலாயிற்று என்பர் சிலர். பொருளுக்காக நிகண்டா, நிகண்டிற்காகப் பொருளா என்பதுதான் இங்கு நமக்கேற்படும் சந்தேகம். அனுமானுக்கே அவர் புரிந்த அரிய

செயல்களை ஒட்டி 'சுந்தரர்' என்ற சிறப்புப் பெயர் அளிக்கப்பட்டு, அவர் தலைமைபெற்ற இக் காண்டத்தை சுந்தரகாண்டம் என்றார் கவி, என்று இன்னுஞ் சிலர் சாதிப்பர். சொல்லிலக்கணம், பொருளிலக்கணம் வல்ல வேறு சில வித்வான்கள், "ஈரமாககுதல் என்ற அர்த்தத்தையுடைய 'உந்தீ' என்னும் தாதுவிலிருந்து 'ஸு' என்ற உபசர்கசுத்தை முன்னிட்டுக கொண்டு உண்டான சொல் 'சுந்தர:' என்பது; அதன் பொருள் 'நன்ருக ஈரமாக்கும் தன்மை வாய்ந்தது', என்றேற் படும்; ராமாயணம் ஆதி காவ்யம் ஆகையால் அகில ரஸங்களும் ராமாயணத்தில் பிராணன்களைப்போல் அமையப் பெற்றிருக்கின்றன;* அவற்றுள் கேட்ப வர் மனத்தை ஈரமாக்கும் தன்மையில் முதன்மை பெற்றது 'விப்ரலம்ப சிருங்காரம்' அல்லது பிரி வாற்ருமை என்பது; அது இக்காண்டத்தின் முககிய ரஸமாகையால் இககாண்டத்திற்கு சுந்தர காண்டம் எனப் பெயர் ஏற்பட்டது" என்பர்.

ராம: சுந்தர: இவ்விரண்டும் விஷ்ணுவின் ஆயிர நாமங்களின் கணக்கில் சேர்ந்தவை. ராமன் என்பது வசிஷ்டர் இட்ட பெயர். அதற்கு முன் னமேஅப்பெயர் கொண்டவர் மற்ருெருவர் உண்டு. அவர் ஜமதகனி ரிஷியின் குமாரர். அவரும் தந்தை சொல் தவருமை என்பதைக கடைப்பிடித்துத் தம் தாயையே வெட்டித்தள்ளியவர். தசரதராமன்

* ரஸஙகள பதது எனபாாகள எனபா போஜர். அவவாறே பிராணன களும பதது என று கணககிடபபட்டுளளன

ஜயித்த ராவணனையும் சிறைப்படுத்திய அர்ஜுனனைக் கொன்றவர். ஆனால், இவ்விருவர்களுள்ள வாசி ராகவன் பாலபருவத்தில் இருக்கும் பொழுதே ஏற்பட்டுவிட்டது. தசரதராமன் சீதையின் பர்த்தா என்கிற பெரும்பேற்றை அடைந்தார். கோடாரி ராமன் என்ற பிரசித்தியைப் பெற்ற மற்றவர்க்கு மனைவி உண்டோ, அல்லது அவர் நைஷ்டிக பிரமசாரியோ நாம் அறியோம். பால்யத்தில் சீதையைக் கைப்பிடித்த பாக்கியத்தால், ‘நீ ராமனா, நான் ராமனா?* என்ற தீர்மானம் இன்றே பிறக்கவேணும்’, என்று தம்மைப்போருக்கழைத்த அக்கோடாரி ராமனைக் கோதண்டராமன் செருக்கடக்க, அவர் வெட்கிச் சென்றார். சிவன் சிலையை ஒடித்து, சீதையைக் கைப்பிடித்தவரல்லாது, வேறு எவரும் ராம நாமத்திற்கு உரியவர் ஆகார் என்ற தீர்மானமும் உலகில் நிலைபெறலாயிற்று.

ராமன் பாலனாக இருக்கும்பொழுது, சீதையை மணம்புரிந்ததால் அவருக்குண்டான சிறப்பைக்

---

* ரகுவம்சத்தின் 11-வது சர்க்கத்திலுள்ள கீழ்க்காணும் சுலோகமே இதற்கு ஆதாரம்:

अन्यदा जगति राम इत्ययं शब्द उच्चरित एव मामगात् ।
व्रीडमावहति मे स संप्रति व्यस्तवृत्तिः उदयोन्मुखे त्वयि ॥

‘இதுகாறும் ராமன் என்ற சொல் உச்சரிக்கப்பட்டபொழுதே, என்னை ஒருவனை மட்டுமே வந்தடையும். இப்பொழுதோ நீ உயர்வுபெறத் தொடங்கியதால், அது என்னைக் குறிப்பிடாமற் போனது எனக்கு மிகுந்த வெட்கத்தைத் தருகிறது’

கூறும் *காண்டத்திற்கு பாலகாண்டம் என்ற பெயர் ஏற்பட்டதுபோல், இங்கும் சீதையின் பிரிவாற்றாமையால், அவருடைய எல்லைகடந்த ஸௌபாக்யம் அல்லது சுந்தரத்தன்மை நன்றாக விளங்கப்பெற்று, அதையே கருத்தாகக்கொண்ட இக்காண்டத்திற்கு சுந்தர காண்டம் என்ற பெயர் ஏற்படலாயிற்று. ராமனின் ஒப்புயர்வற்ற தேக ஸௌந்தர்யத்தின் வர்ணனை இக்காண்டத்தின் நடுநாயகமெனப் பிரகாசிப்பதும் அதற்கிட்ட பெயரைப் பயன்பெறச் செய்வதாகும். ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில், சுந்தர: என்ற நாமத்திற்கு லோகாதிசயமான ஸௌபாக்கியத்தைப் பெற்று விளங்குகிறவர் என்று சங்கரர் வியாக்கியானம் செய்திருக்கிறார். "உன்னுடைய ஸௌபாக்கியம் உன் பிரிவாற்றாமையால் உன் தலைவி படும் துயரத்தினின்று நன்கு விளங்குகின்றது" என, காளிதாஸரும் மேகசந்தேசத்தில் பாடியிருக்கிறார். இவற்றையெல்லாம் எண்ணும்போது ராமனே சுந்தரர்; அவர் சுந்தரத் தன்மையை உணர்த்தும் காண்டத்திற்கு இப்பெயர்தான் பொருந்தும் எனக் கொள்ளுவதே ஏற்புடைத்து. தவிர, முதல் அறுபத்து நான்கு சர்க்கங்கள் வரை ராமனே இல்லாத இக்காண்டத்தில் அவருடைய எண்ணிறந்த கல்யாண குணங்களையும், லோகோத்-

* பாலகாண்டத்தின் இறுதியில் உள்ள तया स राजर्षिसुतोऽभिरामया என்னும் சுலோகத்திலிருந்து சீதையோடு ராமன் சேரப்பெற்றதே அவருக்கிட்ட பெயரின் புகழை அதிகமாக சோபிக்கச் செய்ததென்று ஏற்படும்.

தரமான திருமேனி வனப்பையும், அனுமானும் சீதையும் மிகக் கனிவுடன் பல சர்க்கங்களிலும் பேசிப்பேசி, அவர் அரங்கம் வந்து செயல் புரிவதைச் சொல்லும் மற்ற காண்டங்களைக் காட்டிலும் மிக அதிகமாக அவர் இருப்பை இங்கு நம் மனம் உணரும்படிச் செய்திருப்பது, வால்மீகி சிற்பத்தின் ஒப்பற்ற ஸௌந்தர்யத்தைக காட்டுவதாகும்.

சுந்தர: என்னும் பெயருக்கு இவ்விதமாகக் கூறப்படும் பொருள்கள் யாதாயிருப்பினும் இந்தக காண்டம் ஸ்ரீ ராமாயணத்தின் ஹ்ருதயம் எனக் கருதப்பட்டு மற்ற காண்டங்களுககில்லா மகிமை பெற்றிருப்பது யாவரும் அறிவர். இதொன்றைப் பாராயணம் செய்வதாலேயே, முழு ராமாயணத்தைப் படிப்பதாலுண்டாகும் எல்லாப் பயன்களும் சித்தித்துவிடும் என்ற நம்பிககை ஆஸ்திகர்கள் அனைவர்களுடைய அனுஷ்டானத்திலும் காணப்படுகிறது. ஸ்ரீ ராமாயணத்தையும் ஸ்ரீ பாரதத்தையும் சீர்தூக்கிப்பார்ககையில் ஸ்ரீ ராமாயணத்தில் சிறையிருந்தவள் ஏற்றம் சொல்லுகிறதென்றும, மஹாபாரதத்தில் தூதுபோனவன் ஏற்றம் சொல்லுகிறதென்றும் நம் ஆன்றோர் அறுதியிட்டிருக்கிறார்கள். இக்காண்டம் சீதை சிறையிருந்த வைபவத்தை உணர்த்துவது பற்றி ஓர் தனிப்பெருமை பெற்றிருககிறது.

இககாண்டத்தில் தலைமை பெற்றிருப்பவர் அனுமான். முதன்முதல் அவரைக கிஷ்கிந்தா

காண்டத்தின் ஆரம்பத்தில் கவி நமககுக காட்டு கிருர். சுக்ரீவனது தூதராக ராமனிடம் சென்று சம்பாஷணை செய்த சந்தர்ப்பம் அது. அவர் மொழி களைச் செவியேற்ற ராமன், லக்ஷ்மணனைப் பார்த் துச் சொல்லுகிறதாவது. "லக்ஷ்மணு, சுகரீவ மந் திரியான இககுரங்கின் இன்பமொழிகளைக் கேட் டனையா? இவன் வியாகரணங்கள் பூராவும் கற் றுணர்ந்தவன் என்பது இவன் சொற்பிழை யாதொன்றும் இல்லாமல் பேசுவதிலிருந்தே நன்கு புலப்படுகிறது. அதுமட்டுமல்ல; ஸ்வர வழுவின்றி ரிக்வேதம் கற்றவன், தொடர்பு பிறழாமல் யஜுர் வேதம் பயின்றவன், ராகப்பிசகின்றி சாமகானம் செய்பவன், இவர்கள் யாவரும் இவனை ஜயித்தல் அரிது. இவன் பேசும்பொழுது முகத்திலோ கண் ணிலோ மற்றெந்த உறுப்புகளிலோ எவ்வித விகாரமுமின்றி, மத்திமக் குரலை அவலம்பித்துத் தங்கு தடையின்றி வெகு நிதானத்துடன் உரை யாடுவது மிகவும் வியக்கத் தககது. இவனது வெகு அழகான சொற்களைக கேட்பின் வெட்டவந்த பகைவனும் கத்தியைக கை நழுவ விடுவான் என்ப தில் என்ன சந்தேகம்? இவனன்ரே தூதுவன்! இத்தகைய தூதுவன் இல்லாத மன்னர்களின் மனோரதங்கள் பலிப்பதெப்படி?" என்று தூது வன் என்கிற பெரும் பதவியில் அன்று அனுமா னுக்கு ராமன் முதன்முதல் முடிசூட்டினர். அதற் கிணங்க, ராமலக்ஷ்மணர்கள் இருவரையும் தோள்

களில் சுமந்துகொண்டு சுக்ரீவனிடம் அவர்களை அர்ப்பணஞ்செய்து அவன் மனக்கவலையை ஓட்டினார் அனுமான். அவ்வாறு சுமந்து சென்றதற்குச் சுமைகூலியாக ஏற்பட்டது சீதைக்குத் தூது போகும் மஹா கைங்கர்யம்.

இத்தூதெனும் பெரும்பதவி பெறப் பேராசை கொண்டவர்கள் நளன், கிருஷ்ணன் இருவரும். ஒருவர் அனுமானுக்கு முந்திய காலத்திலும் மற்றவர் பிந்தியும் தோன்றியவர்கள். இந்திரன் முதலிய தேவர்கள் தங்களுள் ஒருவரை மணக்கும்படி தமயந்தியைத் தூண்டுவதற்குத் தூது கிளம்பினார் நளச்சக்ரவர்த்தி. முடிவில் வாடா மாலையை அணிந்த அத்தேவர்கள் முகம் வாடிநிற்க, மண மாலையைத் தம் கழுத்தில் நளனே அணியப்பெற்றார். அதுவே அவர் தூது பலியாமைக்குத்தக்க சான்றாயிற்று. பாண்டவர், கௌரவர் இருதிறத்தாரும் ஒன்று கலந்து வாழ்வதற்குத் துணைபுரியத் தூதுசென்ற கிருஷ்ணனே அவர்கள் ஒருவருக்கொருவர் போரிட்டு மடிவதற்கு அடிகோலித் திரும்பினார். அவ்வாறு வீணாயிற்று அவர் தூதும். அனுமான் தூதின் பலிதமோ திசைக் கருமம் திருத்த வந்த திருமாலுக்குப் பேருதவி புரிந்து அவரால் அணைந்துகொள்ளப்படும் சிறப்பை அனுமானுக்குத் தந்தது.

சுந்தர காண்டத்தை ஊன்றிப்படிப்போருக்கு ரிக்வேதம் பத்தாம் மண்டலத்தில் உள்ள, ஸரமை

தூதுசென்ற வரலாறு ஞாபகத்திற்கு வரும். ஸரமை என்பது ஒரு பெண் நாய்; அது தேவலோகத்து நாய். ஒரு சமயம் பணிகள் என்ற அசுரர்கள் தேவர்களின் ஐசுவரியமான கோக்களைத் திருடிச் சென்றனர். தேவேந்திரன் ஸரமையை அசுரர் இருக்குமிடத்திற்குத் தூது அனுப்பினான். தேவ கார்யத்தை சிரமேற்கொண்டு ஸரமை என்ற நாய் ஆறுகளையும், மலைகளையும், கடல்களையும் கடந்து பணிகள் இருப்பிடத்தை அடைந்து அவர்களிடம் மஹேந்திரனின வீரத்தை எடுத்துககூறி அவர்கள் மனத்தில் அச்சத்தை உண்டுபண்ணித் திரும்பியது. ஸரமையின் தூது வரலாற்றை வால்மீகி ரிஷி மனத்தில் வைத்துக்கொண்டே சுந்தரகாண்டத்தை எழுதியிருககலாம் என்ற ஹேஷ்யத்திற்கு இடமிருககிறது. ராமாயணத்தில் ஸரமை என்பது விபீஷணரின் பத்தினியின் பெயர்.

அனுமான் கடல் கடந்து லங்கை சென்று சீதை விஷயமாக நடத்திய இக் காண்டச் செயல்களைத் தேடல், காணல், தேற்றல், திறல்விளங்கல் என நான்காக வகுத்துப் பின்வரும் பகுதிகளில் சுருங்கக் கூறுவோம்.

# தேடற் பகுதி

'ராமனுடைய பிராண நாயிகையான சீதையை ராவணன் தூக்கிப்போய் லங்கையில் அசோக வனத்தில் சிறைப்படுத்தினன்; அவள் இருக்கும் இடத்தைத் தேடுவதற்கு இச்சை கொண்டார் அனுமான்', என்று இககாண்டம் தொடங்குகிறது. இத்தேடுதலின் திறத்தையும், பெருமையையும், உள்ளபடி உணர்வதற்கு ராமாயணத்தில் நாயக-பிரதிநாயகர்களான ராமனும் ராவணனும் எதைத் தேடி அடைவதில் விருப்பம் கொண்டவர்கள் என்பதை நாம் அறிதல் வேண்டும்.

ராவணன் மூவுலகங்களையும் தனக்குள் அடக்கி யாள விரும்பிக் கடுந்தவமியற்றி மனிதரை நீக்கி மற்றோர் கையால் சாகாவரம் பெற்றான. ராவணனுக்குச் சிரங்கள் பத்தென்றும், அவற்றை ஒவ்வொன்றாகப் பூமலர்களெனக் கொய்து, அகனியில் ஆஹுதி செய்துகொண்டு தவம் புரிந்தான் என்றும் கூறப்பட்டிருக்கிறது. அவன் தவத்தின் கடூரத் தன்மை எவ்வாறோ, அவ்வாறே யிருந்தது அவன் விரும்பித் தேடித் தேர்ந்தெடுத்த ஆட்சி என்பதும்.

தேவர்கோனும் அவன் சிறைச்சாலையில் சிறிது காலம் பதிவு பெற்றிருந்தானென்றால் மற்றோரை

அவன் வருத்தி வந்ததை விளம்பலும் வேண்டுமோ? 'பத்துத்தலைகளா படைத்தனை?' என்று இன்றும் நாம்மொழிவதில் அவனது பயங்கரமான ஆற்றலைக் காண்கிறோம். இத்தகைய ஆட்சியால் சிறைப்பட்டிருந்த மூவுலகங்களையும் மீட்பதற்காகவே வைகுந்தம் விட்டிறங்கி, அவ்வரக்கன் அவமதிப்பிற்குப் பாத்திரமான மானிட வடிவந்தரித்து அவதரித்தார் ராமன் என்ற பெயர் பூண்ட விஷ்ணு. ஆகவே, ராமன் விரும்பித் தேடுவதற்குத் தேர்ந்தெடுத்தது மீட்சி என்பது. அதற்கு அவர் எவ்வாறு துரோகம் செய்யாது நடந்தாரோ, அவ்வாறே ராவணனும் தான் தேர்ந்தெடுத்த லட்சியமான ஆட்சிககுத் தன் உயிரைக கொடுககத் துணிந்து வீரச் செயல்கள் பலவும் புரிந்து வந்தான். இவ்வுலககு ஒருவரே ராமன் என்றிருப்பதுபோல் ராவணனும் ஒருவனே. 'நீ எவ்வகை ஆட்சி பெற்றென்ன? சீதையை ஆளப்பெற்றனையா? உன் ஆளுகையைப் பெரிதுபடுத்தி மனமகிழ்ச்சியுடன் அவள் உன்னை ஆலிங்கனம் செய்யப்பெற்றனையா?' என்று, காது, மூககு இழந்த சூர்ப்பணகையின் ஏச்சைப் பொறுககாமல், ராமனை வஞ்சித்து சீதையை ராவணன் தூககி வந்தான்.

அகஸ்தியருடைய கொடிய சாபத்தால் ஒப்பற்ற அழகுள்ள தன் மேனியை இழந்து அரக்கி உருவம் பெற்றுப் பிரமனுடைய சிருஷ்டி வர்ககத்தையே வெறுத்து உயிர்களைக கொன்று, ஊர்களை

அழித்து வந்தாள் தாடகை. அவள் சாப உடலைத் தாம் விடுத்த அஸ்திரத்தால் நீக்கி ராமன் அவள் உயிரை மீட்டார். இதுவே அவர் ஏற்றதான மீட்சி தர்மத்தில் முதற்செயலாக ஆயிற்று. இதனிலுள்ள ஆழ்ந்த கருத்தையறியாது பல தவருன கருத்துக கள் தோன்றியுள்ளன.

இவ்வாறே மீட்சி தர்மத்திற்கு உதாரணங் களாக விராதன், கபந்தன் இவர்கள் வதங்கள் ஏற்பட்டன. அகலிகையைச் சாபமீட்டதோ நன்கு விளங்கப் பெற்றது. வாலியைக் கொன்றதும் இம் மீட்சி தர்மத்திற்கு உரித்தானதுதான் என்பதைக் காட்ட ராமாயணத்திலுள்ள ஒரு சுலோகமே போதுமானது. ‘அந்த அஸ்திரம் அவ்வீரனுககுச் சுவர்க்கம் செல்லும் வழியைச் செவ்வனே காட்டி யது. ராமன் வில்லிலிருந்து விடுபட்டதால் வாலியை அது உத்தம கதியை அடைவித்தது’ என்பது அப்பாசுரத்திற்குச் சரியான மொழிபெயர்ப்பு. இவ் வாறு நடைபெற்ற மீட்சிகளெல்லாம் சீதையின் சிறை மீட்சியில் உச்சநிலையடைகின்றன.

சீதை, முன் ஜன்மத்தில், குசத்துவஜர் என்ப வர் வேதமோதிகொண்டிருககையில், அவர் நாவி லிருந்து உருககொண்டு தோன்றியவோர் உத்தம நங்கை. வேதவதி என்று அப்பொழுது அவளுக் குப் பெயர். அவள் பிதா அவளைப் புருஷோத்தம ஞன் நாராயணனுககன்றி மற்ருேர்க்கு மனைவி யாக்குவதில்லையென விரதம் பூண்டார். ஆனல்,

அது நிறைவேறுமுன் ஓர் அசுரன் கொடுமையால் அவர் பரகதியடைய நேரிட்டது. தன் தந்தையின் கோரிகைகையை வேதவதி நிறைவேற்ற விருப்பங் கொண்டுமரவுரியுடுத்து;மான்தோலணிந்து, அகினி சாக்ஷியாகத் தவமியற்றி வருகையில் ராவணன் அவள் அழகைக கண்டு மோகித்து அவள் குழலைப் பற்றி பலாத்காரம் செய்ய முயன்முன். தன் கையையே கத்தியாககொண்டு அவன் பற்றிய கூந்தலைப் பறித்தெறிந்து "நீ உயிரிழப்பதற்கு நானே மறு ஜன்மமெடுத்து வருகிறேன்" என்று ராவணனைச் சபித்துவிட்டு, அவன் தீண்டிய உடலை அவள் ஓமத்தீயில் போட்டு மறைந்தாள். அவளே இங்கு பூமியின் புதல்வியாய் சீதை யென்னும் நாமந் தரித்து ஜனகரால் எடுத்து வளர்ககப்பெற்று ராகவனுககு வாழக்கைப் பட்டாள். அவளுடைய வாக்கு நிறைவேறுவதே தேவர்கள தேடிய காரிய மாகவும் ஆயிற்று. அதைப் பயன்படச் செய்வதற் கென்றே விஷ்ணு ராமனக அவதரித்து அவளை மணந்தார் என்று சொல்லப்பட்டிருககிறது. ராவண னைக கொன்று உலகச் சிறையை மீட்பதற்காக அவள் சிறையிருக்க உடன்பட்டு, அவனல் உலகம் பட்ட அவஸ்தைகளை யெல்லாம தான் ஏறிட்டுக கொண்டு, அசோக வனத்தில் சோகக கடலில் மூழ்கி மூழ்கி எழுந்துகொண்டிருந்தாளென்பது அவள் சரித்திரத்திலுள்ள சாரம்.

ராவணனைக் கொல்லுவதற்கு இன்றியமையாத சாதனமாக அவள் பாதிவ்ரத்யம் அல்லது கற்பு

நிலைமை தவறுமை என்பதைக கைப்பிடித்தாள். 'பதிவிரதையின் தவத்தால் நீ எரிககப்பட்டுப் போயினையே' என்று ராவணன் மனைவி மண்டோதரி புலம்புவாள்.

லோக மாதாவான பூமிப் பிராட்டியின் புதல்வியாக சீதை தோன்றியதாலும், அம மாதாவிற்கு அடிககடி ஏற்படும பலச்சிறை, பழிச்சிறை என்றுள்ள இருவகைச் சிறைகளுககும் அவளும் உடன்படலாயிற்று. பழிச்சிறையால் அவளுககு நேர்ந்த கஷ்டங்கள உத்தரகாண்டத்திலுள்ள விஷயம். இங்கு நாம் கருதுவது, சீதைக்கு ராவணனால் நேர்ந்த பலச்சிறை என்பதே.

இவ்வாறு ராமன தேர்ந்தெடுத்த மீட்சி தர்மத்திற்கு எல்லை நிலமாகவுள்ள சீதையின் சிறை மீட்சியில முதல் மங்களமாக ஏற்பட்டது அனுமான அவளைத்தேட இச்சித்தது. யமனிடத்துப் போன உயிரைத்தேட இச்சித்தாலும் அது ஒரு வேளை பலிதமாகலாம். ராவணன் எடுத்துச்சென்ற சீதையைத தேடுவதெனபது 'ஒருவராலும் செய்ய முடியாது; அதற்கிணையாக மற்றெதையும் பேசமுடியாது' என்று கவியே அககபியின செயலைப் புகழ்ந்திருக்கிறார்.

விமானம் முதலிய எவ்வித சாதனங்களுமில்லாமல் ஆகாயத்தில் சஞ்சரிககுந் தன்மை சாரணர் என்பவர்க்கு முக்கியமாய் ஏற்பட்டது. வாயுவின் மைந்தனான அனுமானுக்கு அவ்வித சகதி

யும் மற்றும் பல திறமைகளும் பிறவிப் பொருள்க ளாக உள்ளன. சீதை விஷயமாக அவை முற்றி லும் பிரயோஜனம் பெறுவதை இக்காண்டத்தில் ஆங்காங்கு காண்போம். இவர், மஹேந்திரமலையை அதிலுள்ள பாம்புகள் தலை நசுங்கித் தங்கள் விஷங் களைக் கக்கும்படியாக உதைந்துகொண்டு, ஆகாய மார்க்கமாய் செல்வதற்காக உயரக் கிளம்பினர். இது ப்ரகருதியை ஆகரமித்து பரம்பொருளைக் காண்பதற்கு மேல்நோக்கங்கொண்ட யோகியரின் செயலை மிகவும் ஒத்திருந்தது. அனுமான் பெற்ற த்ருதி அல்லது மனத்தெம்பிற்கு உரியதாயும் விளங்கிற்று.

தங்கள் முறையை நாடும் அவ்வனுமானைக் காண விரும்பிச் சாரணர்களும் அதிகமாக ஆகாயத்தில் சஞ்சரிக்கத் தொடங்கினர்கள். சமுத்திரத்தைக் கண்டு எவ்விதம் அதைத் தாண்டுவதென்று மனம் களைத்து, உண்ணுவிரதமிருந்து உயிர் துறப்பதே தாம் செய்யக்கூடியதென்று தீர்மானித்த அங்க தன் முதலான தம்மினத்தாரைக் கண்டு, "நீங்கள் மனந் தளராதீர்கள். அஞ்ச வேண்டாம். இதோ நான் இருக்கிறேன். அஞ்சனதேவி பெற்ற தீரன். தாண்டுகிறேன் சமுத்திரத்தை. காண்கிறேன் என் அன்னை சீதையை. அப் பாவி ராவணன் காவலி லிருந்து மீட்கிறேன் அத்தேவியை" என்று கர்ஜித்து விசுவரூபங்கொள்ளத் தொடங்கினர். முன் நாளில் மஹாபலியைக் கிட்டி, மூவடி மண்

வேண்டி அதைப்பெற்றவுடன், உலகனைத்தும் வியாபித்து வளரத் தொடங்கிய நாரணன் தானே இவரென்று யாவரும் வியப்புடன் எண்ணினார்கள். வாஸ்தவந்தான்: பகவானுக்கும் பக்தருக்கும் என்ன வேற்றுமை இருக்கிறது ?

இவ்வாறு வானத்தை நாடிக் கடலைத் தாண்டிச் செல்லும்பொழுது மூன்று விக்கினங்கள் இவருக்கு எதிர்ப்பட்டன. முதலாவது, தங்கக் குவியலின் தன்மையைப் பெற்ற மைநாகம் என்னும் மலை. யாருமறியாமல் சமுத்திரத்தில் ஆழமூழ்கிக்கிடந்த இது உயரக் கிளம்பி அதிவேகமாக வரும் மாருதியின் முன் நின்று மனிதர் பேச்சைத் தழுவி உறவு கொண்டாட ஆரம்பித்தது. அதைக் கண்டதும் அனுமான், பெருஞ்செயல் புரியச் செல்லும் தமக்கு இவ்வாறு பொன்மலை எதிரில் நிற்பது விக்கினமென்று தீர்மானித்துத் தம் மார்பினாலதை மோதி அதன் சிகரமொன்றை உடைத்தெறிந்தார். அவருடைய அப்பேராற்றலைக் கண்டு ஆனந்தம் கொண்டு அம்மலை "என்னைத் தவறுதலாக நினைக்க வேண்டாம். உம் தந்தை வாயு எனக்களித்த பேருதவியை நினைந்து இங்கு உம்மை உபசரிக்க எழுந்தேன். அவர் கடலுக்குள்ளே தள்ளி என்னை அன்று அமிழ்த்தியிராவிடில் இந்திரன் என் சிறகுகளை வெட்டி மற்ற மலைகளைப்போல் இருந்த இடம் விட்டுச் செல்லாவண்ணம் என்னையும் செய்திருப்பான். என் கொடுமுடிகளில் தங்கிக், களைப்பாறி உம்மிஷ்டப்படி செல்லும்" என்று வெகு நயம்

பட உரைத்தது. "நான் எங்கும் நிற்காமல் செல்லவேண்டும்; நீர் கோபிகக வேண்டாம்" என்று அதற்கு நல்வார்த்தை கூறிவிட்டு மேலே சென்றார் அனுமான். பொன்மலை ஒன்று தானே வந்து ஒருவனைப் பெறவேணுமென்றால் அதைப் புறககணித்துப் போகவும் கூடுமா? அனுமான் ஒருவரே அவ்விதம் செய்வதற்குரிய 'திருஷ்டி' அல்லது நீடிய நோககம் பெற்றவர்.

பொன்னைத் தப்பிச் சிறிது தூரம் கடந்ததும் போகம் அவரைத் தடுத்து நின்றது. வடமொழியில் பாம்பின் உடலுககுப் போகம் என்ற பெயருண்டு. கவி, போகம் என்று வாய்விட்டுச் சொல்லாமல், பாம்பின் தாயார் "சுரஸை" என்று அதைக குறிப்பிடுகிறார். அச்சுரஸை அனுமானைப் பார்த்து "வாராய் அனுமானே! நான் ஒரு வரம் பெற்றவள். யாரும் என் வாயில் விழாமல் செல்ல முடியாது. ஆகையால் நீயும் அதில் நுழைதல் வேண்டும்" என்றாள். "சீதையைத் தேடிக் கண்டு அச்செய்தியை ராமனுக்குத் தெரிவித்து விட்டு உம் வாயில் வந்து வீழ்கிறேன். இது ஸத்தியம். இப்பொழுது என்னை விட்டுவிடு என் தாயே" என்று பலவாறு அனுமான் அவளைப் பிரார்த்தித்தும், அச்சுரஸை கேட்கவில்லை. இவர் பருககப் பருக்கஅதற்கதிகமாக அவ்வம்மையாரும் வாயைத் திறககவாரம்பித்தாள். உடனே அனுமானுககோர் மதி தோன்றியது. தம் உருவை அங்குஷ்ட

மாத்ரம், அதாவது பெருவிரலளவுக்குச் சிறுத்துக் கொண்டு, அவள் வாயில் சடுககெனப் புகுந்து, வெளியேறினார். அவளைப் பார்த்து "நான் சென்று வருகிறேன். தேவர்களின் தாயே! நல்ல வேளை. உம் வரம் வீணாகாமல் நான் வெளி வந்து விட்டேன்" என்று அவளை நமஸ்கரித்து அவளிடம் விடை பெற்றுக கொண்டு மேற்கிளம்பிச் சென்றார்.*

மேலே செல்லும் எவரையும் கீழே இழுத்துத் தங்கள் வாயிற் போட்டுக கொள்ளும் தன்மை பெற்ற ஐம்புலன்கள் புரிகின்ற ஹிம்சைகளெல்லாம் ஒன்று திரண்டு உருவெடுத்து வந்தவள் போலுள்ள ஸிம்ஹிகை என்ற நீரரககி அனுமான் பேருருவம் தாங்கி ஆகாயத்தில் போவதைக் கண்டாள். அவர் நிழல் அவள் மேல் படவே அதைப் பற்றி அவரைக் கீழே இழுக்கத் தொடங்கினாள். தாமறியாமல் தாழ விழுந்து கொண்டிருப்பதை அனுமான் உணர்ந்து கீழே பார்க்கையில் அவ்வரககி அவர் கண்களுக்குப் புலப்பட்டாள். அனுமானைக கண்டதும் அவள் அட்டஹாஸம் செய்து, "வெகு நாள் பசித்துக்கிடந்த எனககு புசிப்பதற்குத் தகக ஆகாரம் கிடைத்தது; இன்று பசியாறுகிறேன்" என்று நினைந்து, அவர் உருவத்திற்குத் தககவாறு அவள் வாயைத் திறக்கவே அவள் இரு

* யோகததின வாயில வீழ்நதவன அஙகுஷ்டமாதர: புருஷ: எனறு உபதேசிககப்பட்டிருககும ஆதம ஞானததை அவலமபிககாமல ஸதூல சரீரததை காட்டி உயவது அரிது எனனும ததுவம இஙகே குறிபபு

தயம் அவர் பார்வைககுத் தோன்றிற்று. வெகு தாக்ஷியத்துடன் அவள் வாயில் விழுந்து அவள் ஹ்ருதயத்தைப் பறித்து அவளை உயிர் மாய்த்து மறுபடியும் அனுமான் உயரககிளம்பிச் செல்ல லுற்ருர். கடைசியாக லங்காபூமி அவர் கண்க ளுககுப் புலப்பட அதில் குதித்தார். ஒரு பெரு மூச் சுககூட அவருக்குண்டாகவில்லை என்று கவி அவரைக கொண்டாடுகிருர்.

இவ்வாறு சமுத்திரம் தாண்டும்பொழுது ஆங் காங்கு வெளியான தன்மைகளை 'திருதி' (மனத் தென்பு) 'திருஷ்டி' (நீடிய நோக்கம்) 'மதி' (நுண் ணறிவு) தாக்ஷியம் (ஆழ்ந்த சாமர்த்தியம்) என்று நான்காக வகுத்து, காரியம் செய்யப் புகுந்தவன் ஒருவனுககு இவை இன்றியமையாதவை எனக் கவி நன்ருக விளக்கி வர்ணித்திருக்கிருர்.

அனுமான் கடல் கடந்ததை முதல் சருக்கத் தில் 215 சுலோகங்களில் வால்மீகி வெகு அழகாக விஸ்தரித்திருக்கிருர். அதிலுள்ள தத்துவங்களை யெல்லாம் நன்கு கண்ட காளிதாஸர் அச்சம்ப வத்தை அரைப்பாட்டில் ஒடுக்கியிருப்பது விந்தை யிலும் விந்தை. 'என்னுடையது என்பதை விட்ட ஒருவர் ஸம்ஸாரத்தைத் தாண்டுவதுபோல் அனு மான் கடலைக்கடந்தார்' என்ருர் அக்கவிபெருமான். 'ராமனல் விடப்பட்டதும், வாயுவின் வேகத்தைப் பெற்றதுமான பாணம் எவ்வாறு தன்குறி தவரு மல் செல்லுமோ, அவ்வாறு செல்லுகிறேன்,' என

அனுமான் சங்கல்பித்துச் சென்றூர், என்று வால்மீகி அனுமானின் பாரதந்திரியத்தை மெச்சித் திருவாய் மலர்ந்தருளுகிறூர். உபநிடதங்களில், பிரணவமே வில், ஆத்மாவே அம்பு, பிரம்மமே லட்சியம். அதை வெகு ஜாக்கிரதையுடன் அடிக்கும் அம்பைப்போல் அப்பிரம்மத்தினுள் புகுந்து ஒன்றுபடல் வேண்டுமென யோகிகள் போகதைத் தழுவி உபதேசிக்கப்படுகிறது. காளிதாஸர் கொடுத்த உபமானம், வால்மீகியின் அருள் மொழி, உபநிடதத் தாயின் உபதேசம் இம்மூன்றும் எவ்வாறு ஒன்று கூடி உட்பொருளை விளக்குகின்றனவென்பதை ரஸிகர்கள் நன்கு உணர்தல் வேண்டும்.

ராமாயணத்திலுள்ள எல்லா விருத்தாந்தத்திலும், புறச்சுவையும், அகச்சுவையும் ஒன்றுபட்டு ஓர் சுவையாகப் பரிமளிப்பது பார்ககத்தககது.

அனுமான் குதித்த இடம் திரிகூட மலையின் உச்சப் பிரதேசம். அதில் நின்றுகொண்டு லங்காபட்டணம் முழுதும் அவர் உற்று நோக்கும்போது, என்றுமில்லாத அழகும், அரணும் மேலோங்கிக் காணப்படுவதைக் கவனித்தார். “ஓஹோ சீதையைப் பிரமிக்கச் செய்வதற்காக இத்தகைய சிங்காரங்கள்! அவளைத் திருடி வந்ததை ஊர்ஜிதம் செய்துகொள்வதற்காக இத்துணை காவலுமோ” என அவர் எண்ணலுற்றூர் போலும். உடனே தாம் தேடி வந்த காரியம் நினைவிற்கு வர, “இது பயன் தரக கூடியது, இது ஆபத்தை விளைவிக்கும் என்ற

தீர்மானம் எவ்வளவு தெளிவாக இருந்தாலும் அதை நிறைவேற்ற வந்த தூதுவன் மனவுறுதி பெற்றிலானுகில் முற்றிலும் அது பிரயோஜனமற்ற தாகிவிடும்; அறிவிலாத் தூதுவர்கள் முடிந்த காரியங்களையும் கெடுத்துவிடுவார்கள்; முதலில் நாம் இப்பேருருவைக் களைதல் வேண்டும்; இன்றேல் அரககர் கண்களில் நாம் அகப்பட்டு அழிவது நிச்சயம்" என்று அனுமான் ஆலோசனை செய்கையிலேயே யானைபோல் நின்ற அவர் அரை நொடியில் பூனைபோல் ஆனுர். முன் யானையைவிட இப்பூனை ஆயிரம் மடங்கு ஆச்சரியத்தைத் தருகிறது என்று வால்மீகி வர்ணித்திருககிருர். சூரியன் மலைவாயில் விழுவதை எதிர்பார்த்திருந்து அதன் பிறகு அனுமான் தாம் கொண்ட உருவிற்கேற்ற தன்மையுடன் மெள்ள மெள்ள லங்கைக கோட்டையின் வாயிலில் உட்புக யத்தனித்தார். அவ்வளவுதான்! அவரைக கண்டுவிட்டாள் லங்கை. தன் இயற்கை உருவத்தை எடுத்துக்கொண்ட அவளைக் கண்டு அனுமான் அஞ்சாமல் உற்று நோக்கத் தொடங்கிஞர். பேரிடி இடிப்பதுபோல முழங்கிகொண்டு "நில், உன் உயிர் போகுமுன் சொல்: நீ யார்? எங்கு வந்தாய்?" என்றவள் அனுமானை அதட்டிஞள். அனுமான் வெகு வினயத்தோடு, "பதற வேண்டாம்; என் வரலாற்றைத் தங்களுக்கு உரை செய்யாமல் வேறெவருக்குச் சொல்லப் போகிறேன்? தாங்கள் யாரோ தெரியவில்லை. அதை

முன்னதாகக கூறவேண்டும்" என்ருர். "நானு? லங்கைதான் நான்; நான் தான் லங்கை. ராவணே சுவரர் உத்தரவை எப்பொழுதும் எதிர்பார்த்திருப் பவள்" என்ருள். அதைக் கேட்ட அனுமான் "நான ஒரு அற்பக குரங்கு, தெரியவில்லையா? லஙகையென்று சொல்லுகிருர்களே, அதைப் பார்ககவேண்டுமென்று எனககு வெகு நாட்களாக ஆசை; தங்கள் ஸ்வரூபததைப் பார்த்தாகி விட்டது; உள்ளேயும் சென்று பார்த்து விட்டு ஓடிப் போகிறேன்" என்ருர். அதைச் செவியுற்ற அக கொடிய வரககி அடங்காச் சினம் கொண்டு அனுமான் தலையில் ஓங்கி அறைநதாள. அதைத தாங்கி அனுமானும் சிறிது வேதனையுற்று கர்ஜித் தார். பதிலுக்கு அவளைத் தாமும் இடது கை விரல்களைக் குவித்துககொண்டு ஒரு குட்டுக குட்டிஞர். ஆனுல் "இவள் ஒரு பெண்ணுயிற்றே, இறந்து விடப்போகிருள்" எண்ணெண்ணிப் பலமாகக குட்ட வில்லே. அதையே தாங்கமுடியாமல் லங்கை பதை பதைத்துக கீழே விழுந்து உதைத்துக கொள்ள ஆரம்பித்தாள். பிறகு வெகு வணககத்துடன், "மஹானுபாவரே, எனனை நீர் காப்பாற்றவேண்டும். பிரமன் வாககுப் பொய்யாகுமா? "லங்கையே! உன்னைக் குரங்கொன்று என்றைககு வந்து குட்டுகிறதோ, , அன்றைககு அரககர்களுககு அழிவு வரும்" என்றல்லவா அத்தேவர் எனக்கு வரம் கொடுத்தார்; சீதையை ராவணன் தூககி வந்து

பொழுதே, குட்டப்போகும் குரங்கின் வரவை மிகக பயத்துடன் எதிர்பார்த்திருந்தேன் ; வந்தீர் நீர் ; தாராளமாக உள்ளே சென்று உம் இஷ்டப்படி சீதையைத்தேடும்" என்று சொல்லி, அககொடிய தோற்றம் மறைந்து போயிற்று. அனுமான் ஒருவர் அவளை அடககினரே யொழிய, நாம் கொடிய ஸ்திரீ களைக குறிப்பிடுவதற்கு 'கோட்டை வாசல் லங் கணி' 'லஙகா ராக்ஷஸி' என்று சொல்லி இன்றும் அவள் பெயரை கொடுமைககு இலககியமாகக் கூறுகிறோம்.

ராவணனுடைய தங்கு தடையற்ற பேராட்சி யின பெருமையால் சப்தம், ரூபம், ரஸம், கந்தம், ஸ்பரிசம் என்ற ஐவகைப்பட்ட விஷயங்களின் சுகஙகளும அவற்றைப் பெறுவதற்கு இனறியமை யாத அளவற்ற செலவங்களும் லங்கையைத் தங்கள் பிரதான வாஸஸ்தலமாகப் பெற்றிருநதன. அம ராவதி, அளகாபுரி இவையெல்லாம், லங்கைககு உவமை கூறத்தகாதவையாயின. மெத்தப்பயின்ற யோகிகளாயிருந்தாலும், அவர்கள் ஐம்புலன்களை யும் மீளாச் சிறையில் வைககும வலிமை பெற்றிருந் தது லங்கையின ஐசுவரியம். அந்த ஐசுவரியத்தின் வெளிப்பகட்டின் அந்தமும, அழகும், எவ்வளவு இனிமையுடன் தோன்றிற்றே, அதன் உண்மை யான ஸ்வரூபம் மாரீச மானைப்போல் அவ்வளவு கோரமாயும், பயங்கரமாயும இருந்தது. அந்த உண்மை ஸ்வரூபநதான அனுமானை அதட்டி அறைந்தது. அதை அவர் தம பிரமசரியத்தின்

வலிமையாலும், ராமபக்தியின் பிரபாவத்தாலும், ஜயித்துத் தம் வசப்படுத்தினர். உட்புகுந்து பார்க்கும்போது அவ்வைசுவர்யத்தின் கபடத் தோற்றங்கள் யாவும் அவர் கொண்ட கார்யத்திற்கு எவ்விதத்திலும் இடையூறு செய்ய வலியற்றுப்போயின. அவற்றை மாசற்ற மனத்துடன் முற்றிலும் காணவும், ரஸங்களை உணர்ந்து பேசவும், வர்ணிக்கவும், அவர் தகைமை பெற்றவரானர்.

அரக்கி வடிவங்கொண்ட லங்கைச் செல்வத்தின் அகத்தை அடக்கிவிட்டு அதன் புறத்தை நோக்குவதற்காகப் பொன் மதில்கள் சூழப்பெற்ற அந்த நகரத்தின் உள்ளே சென்றார் அனுமான். ரமணீயமான காட்சிகளையும், விநோதங்களையும், வெகு இனிமையான கீதங்கள், வாத்தியங்கள், சிறுமியரின் சிலம்பொலிகள் இவற்றையும் அங்கே கண்டும், கேட்டும், அனுமான் மிகவும் மனங்களித்து அவற்றைச் சிலாகித்தார். "இதென்ன ஸ்வர்க்கமா? தேவருலகா? அல்லது இந்திரன் வசிக்கும் அமராவதியேதானு? நாம் வழிதவறிக் குபேர பட்டணத்தில் குதித்துவிட்டோமா? ஆனல் அவ்விடங்களில் எங்கே இங்கு நித்யவாசஞ் செய்யப்பெற்ற செல்வமும் சிறப்பும்?" என்று பலவாருக எண்ணிக் குதூகலமடைந்தார். நாற்புறமுஞ் சுற்றி அங்குள்ள வைபவங்களைக் கண்காணித்துச் செல்லும்போது கைலாய பர்வதத்தின் கொடுமுடிகள் போல் பிரகாசிக்கும் அரக்கத் தலைவர்களின்

அரண்மனைகள் பல அவருககுத் தென்பட்டன. தம் பிறவிக் குணத்துககுரிய தாவிக் கிளம்பும் தன்மை அவர் மனதைத் தூண்ட, உடனே பாய்ந் தார் ஒரு உப்பரிகையின் உச்சியில். அது பிர ஹஸ்தனின மாளிகை; அங்கிருந்து தாண்டி மற் ருேர் மாளிகையை அடைந்தார்; அது மஹாபார்சு வன் வசிககப்பெற்றது. இவ்வாறு ஒவ்வொரு மாளிகையாகப் பாய்ந்துகொண்டு அங்கு தோன் றிய ஒப்பற்ற அழுகையும அமைப்பையும் ஐசுவர் யத்தையும் (ததர்ச) பார்த்தார். இவைகளேயே கவி இதே வரிசையில் (ததாஹ) எரித்தார் என்று சொல்லப்போகிருர். இவ்வாறு இவருடைய பார்த் தல் சிறிது காலத்திற்குள் எரித்தலாயிறறு.

இவ்வண்ணம் ஒரு வீட்டிலிருந்து மற்ருேர் வீட் டிற்குப் பாய்ந்து பார்த்துவிட்டுக கடைசியாக ராவ ணேசுவரனுடைய அரண்மனையை வந்தடைந்தார். அங்கு சுற்றிலுமுள்ள ஆயுதந்தரித்த ஆயிரக் கணக்கான அரககிகள், அரக்கர்கள், யானைமுதலிய மற்றப் படைகள் இவைகளால் ஏற்படுத்தப்பட் டிருந்த காவல்களேயும், அவ்விதமே சுந்தரமான பூஞ்சோலைகளேயும் கடந்து மந்திர மலைதான் மாளிகை வடிவெடுத்து இங்கு வந்திருக்கிறதோ வென்று நினைக்கும்படியுள்ள துவஜங்களால் அலங்கரிககப்பட்ட ஒப்பற்ற மாளிகை யொன்றில் பிரவேசித்தார். அது ராவணன் வசிககப் பெற் றிருக்கும் அரண்மனை. பல சுற்று மாளிகைகளின் மத்தியில் அமையப்பெற்றிருந்தது. அவற்றிலிருந்து

வீசும் விலையற்ற ரத்தினங்களின் காந்தியாலும், அதையும் விஞ்சியுள்ள ராவணனுடைய தேஜஸினலும் அம்மாளிகை முழுதும் பிரகாசமுற்றிருந்தது. அதன் நடுவில் விமானமொன்று தோன்றியது. குபேரனுக்காகப் பிரமதேவனே விசுவகர்மா என்ற தேவச் சிற்பியை அழைத்துக் கட்டுவித்த விமானமது.

அச்சில்பியரசனும் எங்குமில்லாத விநோதங்களை அவ்விமானத்திலமைத்து, அதைத்தானே தன் கையால் இயற்றினன. பார்த்தான அது முடிவடைந்த பிறகு: "ஆஹா என்ன அமைப்பு! நானிதை ஆக்கினேனேவென எனக்கே சந்தேக முண்டாகிறது" என்று அடங்கா அதிசயம அடைந்தான். குபேரனிடமிருந்து தன் பராக்ரமத்தால் அபகரித்துத் தன் அரண்மனையின நடுவிலே அமர்த்தித் தன் ஆட்சிக்கோர் சிறந்த அறிகுறியாய் இருக்கும்படி ராவணன அதைச் செய்தான். ஆகாயவழி செலவதற்கும அரண்மனையில இருக்கும்போது தங்குவதற்கும் அவ்விமானத்தையே சாதனமாகவும் கொண்டிருந்தான். வால்மீகி ஏழாவது சர்க்கத்தில் அதன் வர்ணனையை ஆரம்பித்து அதை வர்ணிக்கும் சர்க்கத்தில் வேறொன்றையும சேர்த்துச் சொல்லலாகாதென்று நினைத்தவர்போல், அடுத்த சர்க்கத்தில் அதி ஒன்றின் சிறப்பையே தனித்துப் பாடியிருக்கிறார். அதன் வர்ணனையின் அழகை மூலத்திலே

பார்க்கலாமேயல்லாது மொழிபெயர்ப்பில் எடுத்துக்கூறுவது சாத்தியமன்று.

அந்த விமானத்தை வகித்துச் செல்லுவதற்காகத் தங்கக் குழைகளை அணிந்த அரக்கர்கள் பலர் காணப்பட்டார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அவர்கள் உண்மையான அரக்கர்கள் தானோ அல்லது அவ்வுருக்கொண்ட யந்திரங்களோ தெரியவில்லை. ஆனால் அவர்களை மஹாசநா: (பெருந் தீனிக்காரர்கள்) என்று கவி குறிப்பிட்டிருக்கிறார். அத்தீனி யாதாயினும் அதை அளிப்பதற்கு மகா தனவான்களான ராவணன் அல்லது குபேரன் இவர்களில் ஒருவரால்தான் அக்காலத்தில் சாத்தியமென்று மட்டும் ஒருவாறு தீர்மானிக்கலாம்.

அனுமானுக்கு லங்கையில் எந்த ஆச்சரியமான வஸ்துவைக் கண்டாலும் சீதையின் நினைவு அவர் மனதில் உடனே தோன்றும். அதேவிதமாக 'புஷ்பகம்' என்று பெயர் தாங்கிய அந்த விமான ராஜனைக் கண்டபோதும் இதில் ஏறிப் பார்த்தால் ஒருவேளை தம் தாய் ஜானகியைத் தரிசிக்கலாமோவென்று எண்ணி அதில் ஆரோஹணிக்கலானார். அப்போது ஆகாயத்தில் சந்திரன் உதித்து நடுவானம் வந்து வெளியிருளையும் அனைவர் மனதிலுமுள்ள அகவிருளையும் அகற்றிக் கொண்டு ஆனந்தமாகப் பிரகாசித்தான். ஜானகியைத் தேட வந்திருக்கும் அனுமானுக்குத் தன்னால் ஆன உதவியை

அளிக்குமாறு அவ்வாறு புறப்பட்டு வந்தானே யென்று தோன்றியது. விமானத்திலிருந்தபடி அனுமான் ராவணனுடைய பள்ளியறையைப் பார்க்கலுற்றார்.

பள்ளியறையிலுள்ள யாவரும் ஆழ்ந்த துயிலி லமர்ந்து ஞாபகமற்று இருந்தார்கள். அங்கே அள விறந்த தீபங்கள் அசைவற்ற ஜுவாலைகளுடன் எரிந்து கொண்டிருப்பதைப் பார்த்தார். பெரிய சூதாட்டக்காரர்கள், தங்களிலும் சாதுர்யம் வாய்ந்த முற்ற ஆட்டககாரர்களிடம் தோல்வியுற்று எல் லாப் பொருளையும் இழந்து தங்கள் அதிர்ஷ்டக் குறைவை நினைத்துக் கொண்டு எவ்வாறு செய லற்று இருப்பரோ அவ்வாறு அவைகள் காணப் பட்டன. இன்னொரு யோசனையும் இங்கு நமக்குத் தோன்றுகிறது. அங்குள்ள தீபங்கள் அனுமானைக் கண்டு, 'இவர் வாயுவின் மைந்தனாயிற்றே, இவ ருக்கு நாம் அசைவற்றிருந்து உதவி புரியாவிடில் தம் தந்தையைக் கூப்பிட்டு நம்மை அணைத்து விடச் சொல்வார்' என்று பயந்தவைபோல் அங்கு மிங்கும் அசையாமல் அங்குள்ள எல்லாவற்றையும் இவர் நன்கு பார்க்கும்படிச் செய்து கொண்டிருந் தன. ஐம்புலன்களையும் திருப்தி செய்து வைக்கும் தின்பண்டங்களும், பானங்களும் நன்கு சமைக்கப் பட்ட இறைச்சிகளும் தங்கக் கிண்ணிகளிலும் கல் லிழைத்த தட்டுகளிலும் வைக்கப்பெற்று, அவை களின் நறுமணம், 'குழந்தையே! இங்குவா,' என்று

இவரை அழைககும் தாயின் தன்மையைப் பெற்றிருநதது. சுவைகளேத் தாயென்றும் அனுமானேக குழந்தையென்றும் கவி குறிப்பிட்டது மாருதியின் விகாரமற்ற மனதின பான்மையைக காட்டுகிறது.

ஆழ்ந்து துயிலும் ஆயிரககணககான அழகிகளே அனுமான் கண்டார். தேவகன்னிகை, கந்தர்வ கன்னிகை, அசுரகன்னிகை, ராக்ஷஸ கன்னிகை யென்றுள்ள எல்லா ஜாதிகளிலும் உத்தம ரத்தினங்களாக எவர் தேர்ந்தெடுககப்படுவரோ அவரெல்லாம் அங்கு ராவணனுடைய காதலிகளாக வந்து கூடிக குதூகலித்துக கலவி பெற்றுக் கண் துயில் கொண்டிருந்தார்கள். அவரவர்கள் எந்தெந்த வாத்தியங்களில் தேர்ச்சி பெற்றவர்களோ அந்தந்த வாத்தியங்களேத் தங்கள் ஆசை நாயகர்களேப்போல் கட்டிககொண்டு கண் வளர்ந்திருப்பதையும் கண்டார். இங்கு கவி ஒரு விஷயத்தைக காட்டுகிருர். அது ஸ்திரீகள் விஷயமாய் ராவணனைப் பற்றி வழக்கமாகக் கூறும் பழிச்சொற்களுக்கெல்லாம் மறுப்பாகப் பொருள் படுகிறது. அதாவது, ராவணனுடைய அபார வீர்யத்தாலும் குணத்தாலும் சேமிக்கப்பட்ட அங்கிருந்த ஒரு பெண்பாலராவது வேறெவரையும் கருதியவர் அல்லர்; வேறெருவர் வசத்திலும் இருந்தவரும் அல்லர். அளவற்ற அழகும் தூய்மையும் பெற்றிராதவருமல்லர். ஜானகி ஒருத்தியே நியாயமான முறையைத் தழுவாமல் பலாத்காரமாக அபகரித்து வரப்

பட்டவள். அதைத் தீர்ககாலோசனை செய்யும் போது அனுமான் எண்ணியதாவது: "இங்கு பார்க கப்படுகிற மங்கையரைப்போல் அன்னை சீதையை யும் அவள் சிலத்திற்கிசைந்தபடி ராகவனுடன் இருகக இவன் எண்ணியிருப்பனேயானல் எவ்வ ளவு நன்மை இவனுககு உண்டாகியிருககும் இவன் பிறப்பே நற்பிறப்பாக ஆகிவிடும்."

"ராவணன் ஒரு மஹாத்மா என்பதில் சந்தேக மில்லை. ஆனல் அவனும் மனவுறுதியை இழக்கும் படியாக அவ்வளவு அழகும், குணமும் பொருந்திய வளாக என் அன்னை இருந்திருககவேண்டும். அத னலேதான், பாவம், இம்மஹான் இவ்விழிசெயல் புரியலுற்ருன்" என்று மிக்க பரிதாபத்துடன் பின் னும் எண்ணலுற்ருர். இவ்வாறு பட்சபாதம் சற் றேனுமின்றி இரக்கத்துடன் எதையும் சீர்தூக்கிக காணும் யோக்கிதையை இவ்வனுமான் பெற்றிரா விடில் கண்டேன சீதையை என்று இவர் சொல் லப்போவதற்கு அவ்வளவு மதிப்பும் பொருளும் ஏற்படுமா?

அனுமான் தன் சாத்வீக புத்திககு தக்கபடி ராவணனை நினைந்துகொண்டு அங்கும் இங்கும் பார்க்கையில், குத்துவிளககெரியக் கோட்டுக் கால் கட்டில் மேல் அவ்வீரன் படுத்துறங்குவதைப்

* "ராவணன தானும ஸதிரீகளுமாய இருககிற இருபபைககணடு, இவ விருப்பைப பெருமாளும பிராட்டியும சேரவிருகக ஸமமதிததாளுகில இவ வைசுவரியமும குலையாதபடி இருகக வாயததுகிடீ."—

பெரியவாசசானபிளளை : திருமொழி 6-2-6 வியாககியானம

பார்த்துவிட்டார். தாமறியாமல் திடுக்கிட்டுப் பின்னே சென்று வேறொரு மேடையில் இருந்து அம்மஹாத்மாவை மிக்க மதிப்புடன் நோக்கினர். பருத்த தோள்களையுடைய திரண்டுருண்டு நீண்ட அவன் இரு புயங்களும் அவர் கவனத்தைக் கொள்ளை கொண்டன. அவர் அடைந்த ஆச்சர்யத் திற்கு அனுகூலமாக வால்மீகி அவைகளை இங்கு வர்ணிககிறார். வஜ்ராயுதம் இவைகளை சிராய்ப் பதற்கு யத்தனித்துக் கூர் மழுங்கப் பெற்றதுண்டு. விஷ்ணுவின் சக்கரமும் இவற்றைச் சிறிது காயப் படுத்திய முன்னுககுக் கருக்கழிந்து போயிற்று. ஐராவதம் என்கிற வெள்ளை யானை இவைகளைக் குத்தப் புகுந்து கொம்பொடித்துக கொண்டது. யக்ஷர்களும், கந்தர்வர்களும், தேவர்களும், தான வர்களும், இவற்றின் வலிமை தாங்காமல் கதறினர் கள். மந்திரமலையின் நடுவே மிக்க ரோஷத்துடன் படுத்துறங்கும் இரு மஹா சர்ப்பங்களைப் போல அவை விளங்கின. அவைகளால் அலங்கரிக்கப் பட்ட ஆபரணங்களையணிந்த அவ் வரககனின் கறுத்த மேனி மின்னல்கள் சூழப்பெற்ற மேகம் போல் பிரகாசித்தது. அவ்வீரனைச் சுற்றி நாற் புறமும் சுந்தரிகள் பலர் படுத்திருந்தார்கள். அவர் களுக்குச் சற்று அப்பால் தனியாக உள்ள ஒரு தங்கக் கட்டிலில் ஒரு மாது சிரோமணி துயில் அமர்ந்திருந்தாள். அவளுடைய நிகரற்ற அழகு அப்பள்ளியறைக்கே சிறந்த ஆபரணமாக இருந்

தது. முத்து மாலைகளை அணிந்து கொண்டு வெகு சிங்காரமாக அவள் சயனித்திருந்தாள். அவள் தான் ராவணன் மனதுக்கினிய மண்டோதரி. மயனென்ற அஸுர சில்பியின் அருமைப் புதல்வி. அந்தப்புரத்துக்கு அதிதேவதையாக உள்ளவள். பொன்னைப் பழிக்கும் அவளுடைய மேனியும், அழி வற்ற யௌவனமும், சௌந்தர்யமும் சீதை யென்கிற மயக்கத்தை அனுமானுக்கு உண்டுபண்ணவே, அவர் தோள்தட்டித் தன் வாலை முத்தமிட்டு, ஆனந்தமடைந்து, குதித்து விளையாடி, அங்குமிங்கும் சென்று, பாடித், தூணேறிக் கீழே குதித்து இவ்வாறு கபிகளுக்குள்ள எல்லாத் தன்மைகளையும் புலப்படுத்தினர். தாம் தாசரதி விடுத்த தூதனென்பதையே மறந்தார். சீதையைக் காண வேண்டுமென்கிற எண்ணத்தை இதுவரையில் தாங்கி அதன் பாரம் பொறுக்கமாட்டாமல் கீழே போட்டார் போலும்! மாருதியும் இவ்வாறு மயக்கங் கொண்டது குணங்களிலுள்ள அவர் பக்ஷபாதத்தையும் அவருடைய கள்ளம் கபடமற்ற தன்மையையும் காட்டுகிறது. உடனே அவர் தாமே தம் புத்தியை ஸ்திரப்படுத்திக்கொண்டு, “இதென்ன அறியாமை! ராமனைவிட்டுப் பிரிந்த சீதை பக்ஷ்ய பானங்கள் அருந்தித் தன்னை அலங்கரித்துக் கொண்டு இவ்வரக்கன் அந்தப்புரத்தில் நித்திரை கொள்வாளா? மூவுலகங்களிலும் ராமனை நாடிய மனம் மற்றொன்றைக்கருதுமா?” என்று மேலும் தேடலுற்றார்.

மற்ெருரு சந்தேகமும் இவ்வாறு கலங்கிய அவர் மனதில் உதிககலாயிற்று. "அலங்கோலமாய் நினைவற்றுப் படுத்துறஙகும் பரதாரங்களைப் பார்த்துக கொண்டு இவ்விரவைக கழிக்கின்றேமே, நம் அறநிலை அழியாமல் எவ்வாறிருககும்? ஆனல் இநதிரியங்களினுடைய குணதோஷங்களுககு மனமன்றேகாரணம்! அது விகாரமற்று இருககும் போது எதற்கு நாம கவலையுறல வேண்டும்? அது அப்படியிருககட்டும்: பதிவிரதாசிரோமணியான சீதையைத் தேடுவதென்ருல் ராவணன அந்தப் புரமா அவளை ஆராயுமிடம்? என செய்கிறது? மானைத் தேடுவதெனருல் அதனினத்திலேதானே அதைக காணமுடியும. அதுபோல ஒரு மங்கை மறைந்து போனல மஙகையர்கள இருககும் ஸ்தானததைததானே நாம சோதிததல வேண்டும்". இவவாறு தாமே ஆக்ஷேப சமாதானங்களைச் செய்து கொண்டு, லங்கையில ஓரிடம் பாககியில்லாமல் பார்த்து 'சீதை லங்கையில் இல்லை. இருககிருள எனறு சம்பாதிககழுகு சொனனது உணமை மொழியலல' எனறு தீர்மானம் தலையெடுகக அனுமானசெய்வதறியாமல உயிர்துறப்பதேநலமென்று ஒழிந்தார். வைராகயம் மேலோங்க அவர் அஹம் அனைத்தும அடஙகிப்போயிற்று. நம்மை நம்பி அடையாள மோதிரத்தை அளித்தாரே ராகவன் என்றெண்ணி அதைத் தன்விரலில் பார்க்கலானர். திருமங்கைமன்னன் நாராயண நாமத்தைக் கண்

டதுபோல் ராமனென்னும் நாமம் அவர் கண்ணெதிர்ப்பட்டு அவர் கலககத்தை ஓட்டிற்று. இதைககவி வாய்விட்டுச் சொல்லவில்லை. 'உடனே அனுமான் உற்சாகத்துடன் 'நமோஸ்து ராமாய' என்று உறககச் சொல்லிக்கொண்டு கிளம்பினர்; இதுகாறும் தோன்றாத அசோகவனம் அங்குஅவர் முன் தோன்றியது' என்று கூறியதிலிருந்தே இது தொனிககின்றது. "ஆஹா இதை நாம் இன்னும தேடவில்லையே! இதில நம் அன்னை இருப்பது நிச்சயம்; நம் மனத்தில இதுவரையில் இல்லாத சந்தோஷ உணர்ச்சியே நமககு இதை நன்கு கூறுவதுபோல் இருக்கிறது" என்று அவ்வுத்யான வனத்திற்குத் தம் அடிகளைத் திருப்பலானர்.

இதிலோர் ரகசியம் இருக்கிறது. ஞானயோகத்தால் யோகிகள் தேடிக்காண விரும்பும் பரம்பொருளை 'ப்ரும்மண:பதம்' என்று சொல்வார்கள். அவ்வாறே இங்கு கர்மயோகிகளில் சிறந்தவரான அனுமான தேடிககாண விரும்பியதை 'சீதாயா: பதம்' என்று கவி குறிப்பிட்டார். யோகிகளும் அப்பொருள் இல்லாத இவ்வுலகத்தில் அதைத் தேடிச் சோர்வுற்று, "ஆககப்பட்ட இவ்வுலகிலா எவரும் ஆக்காத அப்பொருள் இருககும்," என்று அறிந்த பிறகே அதை அடைவதற்கு ஆசார்யனை அடைவார்கள். அவ்வாறே நம் அனுமானும் ராவணன் பள்ளியறையில் அப்பதிவிரதையைத் தேடிக் களைப்புற்று, காணமல், அஹமடங்கிக்

கணையாழியில் கோயில் கொண்ட ராமநாமத்தைக குருவெனப் பற்றித் தேவி இருக்குமிடத்தை அறியலானார். இந்தக் கிரமத்தைத் திருமங்கை மன்னனின் 'வாடினேன் வாடி வருந்தினேன்' என்றுள்ள பாசுரத்தில் பார்க்கலாம்.

# காணற் பகுதி

இனி அனுமான் அசோக வனத்தை யடைந்து அங்கு சோகத்தின் உத்தம வடிவைககண்ட கதை யைக கூறுவோம். அதற்குச் செல்லுமுன் கருதத் தககவை ஒன்றிரண்டு உள்ளன.

ஒருநாள் வால்மீகி பகவான் நடுப்பகல் நீராட் டத்திற்காக வழக்கம்போல் கங்கைக்குச் செல்லா மல் அதற்கு அருகாமையிலுள்ள 'தமஸை' என் னும் நதிககரையை நாடி, அவ்வாற்றின் ஜலத் தைக் கண்ணுற்ருர். அவருககுப் பின்னே மிகக வணககத்துடன் கலசமும் மரவுரியும் வைத்துக் கொண்டு நின்ற பரத்துவாஜர் என்னும் தம் முக் கிய சீடரை நோககி "பார்த்தனையா, பரத்வாஜா! தமஸையின் தீர்த்தம் எவ்வளவு பரிசுத்தமாய் அழகுடனும் தெளிவு பெற்றும் விளங்குகிறது; நல்லோருடைய மாசற்ற மனம் தீர்த்த வடிவங் கொண்டு இங்கு பெருகுகின்றதோவெனத் தோற்றுகிறது, இக்கரையில் கலசத்தை வை; ஸ்நானவல்கலத்தை (மரவுரியை) என் கையில் கொடு; இன்று நான் இங்கேயே நீராடப்போகி றேன்" என்று சொன்னுர். சாந்தரஸமே தீர்த்தரூப மாய் வந்து, அம்முனிவரை வணங்கலாயிற்ருே

வெனத் தோன்றிற்று. சீடர் கையிலிருந்து வல் கலத்தைப் பெற்றுக்கொண்டு கரையிலுள்ள காட்டினழகை அவர் நோககலானர். அங்கே ஆண் கிரௌஞ்சமும் பெண் கிரௌஞ்சமும் அம்மஹரிஷியின் அருகாமையில் கூடிககுலாவிப் பயமின்றிப் பறந்து இனிய குரலுடன் பாடிககொண்டிருந்தன. சிருங்கார ரஸமே தன் தூய்மையுள்ள தன்மையுடன் அம்மஹரிஷிககு உருக்காட்ட வந்ததோ வென இருந்தது. அப்பறவைகளை வால்மீகி பார்த்துக கொண்டிருக்கும்பொழுதே அவைகளில் ஆண் பக்ஷியை ஒரு கொடிய வேடன் அம்பினலடித்துக் கீழே தள்ளினன். அடிபட்டு வீழ்ந்த பக்ஷி இரத்தம் பெருக உயிர் துறக்கலாயிற்று; ரௌத்ரம, பிபத்ஸம அலலது குற்சைச்சுவை, இவ்விரண்டின் தன்மைகளும் நன்கு விளங்கப் பெற்றன. ஆணின பிரிவைச் சகிகக மாட்டாமல் கேட்போர் உள்ளமுருகும்படி பெண் பறவை கதறியது. அதன் சோகம் மஹரிஷியை அடைந்து, அவருடையதாக ஆகி, சலோக ரூபங்கொண்டு அவரறியாமல் அவர் திருநாவிலிருந்து புறப்பட்டது.

மா நிஷாத ப்ரதிஷ்டாம் த்வம்
அகம: சாச்வதீ: ஸமா: ||
யத் க்ரௌஞ்சமிதுநாத் ஏகம்
அவதீ: காம மோஹிதம் ||

'ஏ வேடனே! நீ வெகுகாலம நீடித்து நிலை பெற்றிருக்கமாட்டாய். காமசுகத்தை நாடித்

தங்களை மறந்திருந்த பறவைகளின் ஜோடியி லிருந்து ஆணை அடித்துக்கொன்றனையே!' என்பது அச்சுலோகத்தின் பொருள்.

ராமாயண மென்னும் காவ்யத்தை முதன் முத லாகச் சிருஷ்டிககப்போகும் அக்கவிககு முக்யமா யுள்ள காவ்யச் சுவைகளெல்லாம் தங்களை ஒன்றன் பின் ஒன்ருக வநது உருககாட்டிப் போயின. அவற்றுள் கருணம் என்னும் மெய்ப்பாட்டிற்கு மேல் நிலையாகவுள்ள சோகம், சுலோகமாக மாறி மாநிஷாத என்று வெளிவரலாயிற்று. அதுவே ராமாயண காவ்யத்தின் முக்கியரஸம். அந்த ரஸத் தின் அழகான தத்துவத்தையேதான் அனுமான் கண்ட சீதையின் கற்பு நிலையில் நாம் காணப் போகிருேம்.

சீதையைச் சிறையில் வைத்து ஹிம்சைகள் பலவும் நிகழ்த்திவந்த இராவணனைப் பத்துத் தலை களையுடையவனென்று சொல்லக கேட்டிருககி ருேம. ஆனல் அவன் சாந்தனுக அந்தப்புரத்தில் பார்ககப்பட்டபொழுது, ஒரு தலையும் இரு கை களுமே பெற்றிருந்தான். தன் ஆட்சியை உணர்ந்து அஹஙகாரமடையும் பொழுதுதான் சிரங்கள் பத் தும் அவற்றிற்குத் தககபடி கைகள் இருபது முடையவனுகக் காணப்பட்டான். ஆனல் பத் தென்ற இவ் வெண்ணிககை எதைக குறிககிற தென்று உணர்ந்து உரைத்தார் யாருமில்லை.

அதன் மர்மம் அகனி புராணத்திலுள்ள வசனங் களிலிருந்து நன்கு புலப்படககூடியது.

அந் நூலில் ஹிம்ஸையின் வகைகள் பத்து என்று கூறப்பட்டுள்ளன. அயலாரை நடுக்கமுறச் செயல், அவரை அலட்டல், அலறச் செய்தல், புண் படுத்தல, கோள் மொழி யுரைத்தல், இதத்தை வெறுத்தல், உள்ளம் நோக உரையாடல், சுகத்தைக கெடுத்தல், சிறை வைத்தல், கொல்லத் துணிதல் என்றுள்ளன அவைகள்.

மேலும அப்புராணத்தில் அஹிமஸையே தர்ம மென்றும அதற்கு மாறுக உள்ள ஹிம்ஸையே அதர்மமெனறும் தர்மாதர்மங்களுககு இலக்கணம் கூறப்பட்டிருககிறது. ஆகவே ராவணன் பத்துத் தலைகள் படைத்தவனென்றல அவன் ஆட்சிப் பேற்றுககுத துணையாகக கொண்ட ஹிம்ஸையின் தன்மைகள் பத்தும் பொருந்தியவன் எனறு எண் ணுதலே ஏற்புடைத்து.

இவ்வாறு இவனுடைய தன்மைகள் சீதையை எவ்வாறு துன்புறுத்தின வென்பதே அனுமான் அசோக வனத்தில் கண்ட காட்சி. அனுமான் அசோக வனத்தினுட் புகுந்து அதன் ஒப்பற்ற சிறப்பைக் கண்டார்.

' சீதையைத் தூககி வந்தது எத்தகைய கொடுஞ்செயல்! ஆயினும் அத்தேவியை வைப்ப தற்கு அத்தகைய இடத்தை இராவணன் தேர்ந் தெடுத்தது அந்த துஷ்டனிடத்திலுமுள்ள ரஸிகத்

தன்மை; இந்தச் சிங்காரத் தோட்டத்தில் வசிப்ப தற்கு அன்னை சீதையே தகுதியுள்ளவள்; அவள் இருக்கப் பெறுவதற்கு இந்தத் தோட்டமே தகைமை பெற்றது; அதோ தோன்றுகிற செய் குன்றிலிருந்து வெகு அழகாகப் பெருகுகின்ற நதிக்கு அவள் காலசந்தியை வழிபடுவதற்கு இவ் வேளையில் வருதல்கூடும்; அங்கு சமீபத்திலிருக்கும் சிம்சுபா மரத்திலேறி அதன் கிளைகளில் ஒளிந்து கொண்டு நடப்பதை நோக்குவோம்,'' என்று அனுமான் தம் வடிவை மிகச் சிறுத்துக்கொண்டு அவ்விருக்ஷத்தில் ஏறி மறைந்துகொண்டார். அவர் இடத்திற்கருகாமையில் பளீர் என்று ஓர் வெளிச் சம் தோன்றியது. அதை உற்று நோக்குகையில் அழுக்காடை தரித்து அரக்கிகள் நடுவிலே உள்ள பெண்ணுருவம் ஒன்று தோன்றிற்று. அவர் தேடிக் கண்டு தரிசிக்க விரும்பிய சீதாதேவியின் தேஜோ வடிவே அது. "மண்டோதரியைக்கண்டு சீதை யென்று மயக்கங்கொண்டோமே! அவளெங்கே! இங்குக் காணப்படும் தேவி யெங்கே! என மயக்கம் எனக்கே வியப்பைத் தருகிறது" என்றெண்ணினர்.

ராவணன் அன்று ஆகாயத்தில் வெகு விரைவு டன் தூக்கிச் சென்றபோது தம் மனத்தில் புகுந்து மறைந்திருந்த தேவி இவளே யென்று அனுமான் நிச்சயித்தார். அங்குக் காணப்பட்ட ஆடையாபர ணங்கள் போன்ற அடையாளங்களும், அவர் எண் ணியதை உறுதி செய்தன. நாராயண வடிவங்

கொண்டு எதிர் நின்ற பரம்பொருளைக் கண்ட பேயாழ்வாரைப்போல் ‘திருககண்டேன் பொன் மேனி கண்டேன்’ என்று அனுமானும் சிந்திக்கலா னார். அனுமான் கண்ட சீதையின் வர்ணனையில் உவமைகள் தொடுக்கும் தம் கவிச் சிறபத்தின் கரையைக கவி நமக்குக காட்டுகிறார். அவர் வாக்கு அதன் ஆழ்ந்த பொருளையும் அமர்த்திக கொண்டு மேலோங்கி அழகு பெற்றிருககிறது. மூலத்தில் தான் அச்சிறப்பைக காணுதல்கூடும். ஆயினும் ஒன்றிரண்டு உதாரணங்களையாவது உரையிடாது விடுவது உசிதமன்று.

சீதை சோகத்தால் சூழப்பெற்று விளங்கியது புகை நடுவே தீக்கொழுந்தெனத் தோன்றியது. அழுககடைந்து ஆபரணங்கள் அணியப்பெறாத அத்தேவியின் திருமேனி நக்ஷத்திரங்களுககிறை வனை சந்திரன் கருமேகங்கள் நடுவே மறைந்திருக் கும் தன்மை பெற்றிருந்தது. இலககணப் பிழை யால பொருள் மாறிப்போன சொல்லோ, கலக்க முற்ற புத்தியோ, இடையூறுகளில் அகப்பட்ட சித் தியோ, வீழ்ச்சி பெற்ற செல்வமோ, பொய் மொழி யால் போக்கற்றுப்போன புகழோ, ஆதரவற்ற ஆககினையோ, சேவகனிழந்த சேனையோ, தன் னினத்தைவிட்டுப் பிரிந்து நாய்கள் நடுவே பரிதவிக் கும் பெண்மானேவென இருந்தாள் சீதாதேவி. ‘கண்டனன் அனுமனும் கருத்தும் எண்ணினன்’ என்றார், வால்மீகியின் அம்சாவதாரமாய் அவரு டன் ஒத்துக் கவிபாடும் கம்ப நாட்டாழவாரும்.

அனுமான் எண்ணிய கருத்தைச் சுருங்க உரைத்திடில் வால்மீகி படைத்த இலககியத்திற்கு ராமாயணம் என்று பெயரிட்டது பொருந்தாது; சீதாயநமென்றே அதை அழைத்தல் வேண்டுமென்பதே. "சீதைக்காகவல்லவா ராமன் கொண்ட அழகும் அவர் இயற்றிய காரியங்களும்; ஒழுககம, பிராயம், நடத்தை, குடிப்பிறப்பு இவைகளால சீதையைப் பெறுவதற்கு ராமன் அருகரா? என்று கருதலாமேயொழிய அவரை மணப்பதற்கு அக கருங்கண்ணி தகைமை பெற்றவளா எனபதில் என்ன சந்தேகம்? ராமன் தாடகையின சாப உடலைப் போக்கியது அவர் கைவண்ணம்; அகலிகையைச் சாபமீட்டு, அவள் சுநதரவடிவைத் திருப்பித் தந்தது கால்வண்ணம்; இவ்விரண்டும் தேவியைக கைப் பிடித்து அவளால் பாதசுச்ரூஷை செய்யப் பெறுவதற்கு வேண்டப்படும் ஈசுவரத்தன்மை ராமனிடத்தில் உண்டென்பதைக காட்டின. விராதன் பட்டதும், கபந்தன் மாய்ந்ததும, வாலி வதமடைநததும், சீதைக்காகவே; நாம் சமுத்திரம தாண்டியதும் மற்றுள்ளோரும் தாண்டப்போவதும், ராவணன் நாசமுறப் போவதும சீதையின் பொருட்டே. ஆஹா! இவளன்றோ தசரத மன்னரின் மனமுகந்த மருமட்டுப்பெண்! இவள் தன் பர்த்தாவுடன் காட்டுக்குப் புறப்படுகையில ராமனுடன் தங்கப்போகும் நாட்களைக கணக்கிட்டுப் போதுமான ஆடையாபரணங்களை அக்கிழ அரசன் தானே தன் கையினுல்

எடுத்து ரதத்தில் வைத்தாராம. அவர் வைத்த முஹூர்த்தம், அவ்வாபரணஙகளில் ஒரு பாகத்தைத் தன் ஆடையில் முடிந்து ராவணன் தூக்கிச் செலலும் பொழுது நம் நடுவில் அவள் போடலாயிற்று. நாமும நம் நாயகன் சுககிரீவனும் மற்றுமுள்ள நம் சுற்றத்தாரும் உயர்வு பெற்று உய்வதற்கு அதுவே ஏதுவாயிற்று. இதை யெல்லாமெண்ணும பொழுது நாம் கொண்ட அதிர்ஷ்டமே அதிர்ஷ்டமென்று தறபெருமை யடையாமலிருகக முடியவில்லை. இத் தேவியைத் தேடுவதற்கு நாற்றிசையிலும் பலகோடி வானரங்கள் சென்றிருகக நாமனறே இவளைககாணும் பாககியமும் பேரருளும் பெற்றேம்! இவள் நிமித்தமாக இதுகாறும் ராகவன் இயற்றிய செயலகளெல்லாம் அற்பமென்றே தோனறுகிறது. இவள் விஷயமாய் ராமன மூவுலகங்களையுமே ஓர் புரட்டுப் புரட்டி யிருப்பரேயானுல் அது மிகையாகாது" எனற பலவாறன எண்ணங்கள் அனுமான் மனத்தே உதித்தன.

உபநிடதங்களில் பரம்பொருளைக கண்ணுலே காணப்பெற்ற யோகியரைப் புகழும்போது, 'அவிழ்ந்தன இருதயத்திலுள்ள தீவினை முடிச்சுகளெல்லாம்; சென்றுபோயின சந்தேகங்கள யாவும்; கழிந்துவிட்டன கர்மங்களனைத்தும்' என்று விளம்பப்பட்டிருககிறது. இங்கே சீதையைக்கண்டு அனுமான் அடைந்த மனமலர்ச்சியை எடுத்துரைப்பதற்கு அத்தகைய வசனங்களும் போதாதென்றே தோன்றுகிறது.

'உன் உயிருக்குயிரான பரமாத்மாவை நீபார்த்தல் வேண்டும்; பார்த்ததைக் கேட்டறிதல் வேண்டும்; அறிந்ததை மனத்திடல் வேண்டும்; மனத்திட்டதை இடைவிடாது கருதிக்கொண்டிருத்தல் வேண்டும;' என்றுள்ள வேதமாதாவின் உபதேசத்தின் முழுப்பயனையும் அடைந்தவர், சீதையைக் கண்ட அனுமான் ஒருவரே. தேசமெங்கும் கோயில் கொண்டு வணங்கப்பெற்று இன்றும் ராமாயணக் கதைக்கு உயிர்பெற்றிருக்கும் நற்சாட்சியென்று காளிதாஸர் பாடும் பெருமையைப் பெற்றிருப்பதே அனுமான் அடைந்த மேன்மைக்குத் தக்க சான்றாகும்.

சீதையை அனுமான் மேன்மேலும் நோக்குகையில் அவருக்கு ஓர் சம்சயம் உண்டாயிற்று. இத்தகைய தேவியைப் பிரிந்து ராமன் உடனே உயிரிழக்காமல் இருந்தாரே, இஃதென்ன அதிசயம்! அவர் ஈசுவரனாயிருந்தாலும் இவ்வாறு இருந்ததும் இருப்பதும் சாத்தியமன்று. ஆனால் இத்தேவியின் மனம் அவரிடத்திலும் அவர் மனம் இத்தேவியினிடத்திலும நிலைபெற்றிருப்பது இருவரும் உயிர் தரித்திருப்பதற்கு ஹேதுவாயிருக்கலாம் என்று ஒருவாறு ஸமாதானமடைந்தார்.

"மூவுலகங்களிலுமுள்ள ஆனந்தங்களனைத்தும் நம் அன்னையை வந்து அடைவனவாயின் அற்பமென்றே அவற்றை எண்ணல் வேண்டும். அத்தகைப் பேறு பெற்ற இத்தேவி படும்துயரம் ராம

னுககு அடிமையாய்விட்ட என் மனத்தையும் இவ ளுககே மீண்டும் அடிமையாககுகிறது" என்று நினைந்துகொண்டு அனுமான் தீனயான சீதையைக கண்டனர். சீதையின துணிவைப் பார்ககும் பாக கியமும் அவருககு உடனே உண்டாயிற்று. துயரக கடலில் மூழ்கியிருககும் சீதைககுத் தைரியத்தை ஊட்டிவந்தது பதிவிரதைகளில் அவள் சிறந்திருந்த தேயாகும். 'பதிவிரதா' என்பது ஸம்ஸ்கருதம். பதியே எவளுககு விரதமோ அவள் பதிவிரதை. விரதமென் றுலென்ன? எவர் அல்லது எதன் பொருட்டாவது எப்பொருளையும் விருப்புடன் விடுவதற்கு இச்சை கொண்டிருத்தலே. ராமன் பொருட்டு எந்தச் சுகத் தையும், பெருமையையும் விடுவதிலிருந்த சந்தோ ஷம் சீதைககுச் சிற்றின்பங்களொன்றிலுமில்லை. அதுவே அவள் பாதிவிரத்யத்தைப் பயன்படச்செய் தது. கணவனிடமிருககும ஆசையால், இன்னொரு வரைக் கருதாமலிருக்கும் மண்டோதரி போன்ற மாதர்கள் பதிப்பிரியைகளாக ஆகலாமேயன்றிப் பதிவிரதைகள் என்ற கணக்கில் சேரப் போகாத வர்கள். அத்தகைய மாதர்கள் தங்கள் விருப்பத் துடன் நாடுவதற்குரிய எல்லாச் சுகங்களுக்கும் தங் கள் பதியை இன்றியமையாத துணைவனென்று மட்டும் எண்ணியவர்கள். சுகங்களை இழக்கும்படி நேர்ந்தால் அதில் மனமாரக் களிப்புற்றவர்களல்லர். 'சிரேயஸ்' என்று சொல்லப்படுகிற கேவலம் நன்மைக்கும், 'ப்ரேயஸ்' என்று சொல்லப்படுகிற

கேவலம் இனிமைககுழுள்ள வேற்றுமையே பதி விரதைக்கும் பதிப்பிரியைக்குமேற்பட்டுள்ளது.

சீதையினுள்ளே அவள் துக்கத்தால் மறைபட்டிருந்த தைரியம் ராவணனைக் கண்டதும் சீறிக்கொண்டு மேலோங்கி விளங்கிற்று. அவ்வேளையில் ராவணன் தன் முககிய ஸ்திரீகளுடன் அங்கு வந்து சீதையுடன் வார்த்தையாடியது தெய்வீகமென்றே எண்ணவேண்டும். அவனைக் கண்டு அவன்கொண்ட தீதுள்ள கருத்துககளை அனுமான் நன்கு அறிவதற்கும், தேவி அவனையொரு புல்லென எண்ணிப் பேசியதைக் கேட்டு அவள கற்பின் உயர்வை உணர்வதற்கும் அவ்வமயம் அவன் வரவு அனுமானுக்குப் பேருதவி புரிந்தது.

சீதையின் மனத்தைக் கவரும்பொருட்டு, வெகு சிங்காரமாய்த் தன்னை அலங்கரித்துக்கொண்டு ராவணன் அத்தேவி முன் தோன்றினை. முது காட்டிலுள்ள துர்த்தேவதையின் கோயிலொனறு கோலங்கொண்டிருந்ததுபோல் அத்துணை பயங்கரமாய் இருந்தானவன என்று கவி அவ்வரக்கர் கோனை வர்ணிக்கிருர். மிகக இனியதாகவும், அழகாகவும், தன் குரலையமைத்துககொண்டு சீதையின் சௌந்தர்யத்தைப் புகழ்ந்து “என் பள்ளியறையை எககாலம் நீ பயன்படச் செய்யப்போகிருய்?” என்று அக்கொடியோனும் கெஞ்சினன். அனுமான்பின்பு சொல்லப்போவதிலிருந்து சீதையின் பாதங்களில் அவன் விழுந்தானென்றுமேற்படுகிறது. “உன்

னுடைய எக்தெந்த அவயவங்களில் என் கண்கள் செல்லுகின்றனவோ, அவற்றிலேயே அவைகள் பதிந்துவிடுகின்றன" என்று அவன் இங்குக் கூறினன். ஆயினும் அவனறியாமலே சீதையின் பாதங்களே அவன் மனத்தை விசேஷித்துக் கவர்ந்தன. இது யுத்த காண்டத்தில், சபை நடுவே அவன் புலம்பும் பொழுது நன்கு வெளியாகிறது.

"வெகு மிருதுவாய் வெகு அழகாய்த் தரணியில் நன்ருகப் பதிந்து சிவந்த நகமணிகளுடன் பிரகாசிகக்கும் சீதையின் பாதங்கள் என் மனத்தைக் கொள்ளை கொள்ளுகின்றன; என் செய்வேன்" என்ருன். இங்கும் அவன் சீதையைப் பிரார்த்திக்கும் பொழுது "காமத்திற்குக் கரையில்லை யென்று சொல்லுவார்கள்; ஆனல் உன்னைக் கண்டதும் எவரையும் இழுத்தோடும் இந்திரியங்கள் திறமையுள்ள சாரதியால் நடத்தப்பெற்ற குதிரைகள்போல வழி தவருமல் செல்ல விரும்புகின்றன; நீ என்னை இவ்வாறு திட்டுவதைக் கேட்டும் எனக்குச் சுவபாவமாயுள்ள குரோதம் என் மனத்தில் நிலைபெறவில்லை" என்ருன். இவ்வாறு காமனுக்கு வசப்பட்டுப் பிதற்றும் ராவணனைக் கேட்ட சீதையும் கோபத்தை விட்டுக கருணை புரியலானள்.

"ஐயோ! என்ன அனர்த்தம்? இங்கு சாதுக்கள் எவருமில்லையா? இருந்தும் அவர்கள் சொல்லுவதை நீ செவியுருது இவ்வாறு பிதற்றுகின்றனையா? அடியோடு உன் புத்தி, ஒழுககம் இழந்து

தடுமாற்ற மடைகின்றதே! சாஸ்திரங்கள் அப்புற மிருககட்டும்; உன்னையே நீ உபமானங்கொண்டு பார்; உன் மனைவியர் உன்னிடத்தில் எவ்வாறு இருக்கக் கருதுகின்றனையோ அவ்வாறு அயலாரிடம் அவர் மனைவியர் இருத்தல் வேண்டாமா? அரசனென்றும், குபேரன் தம்பியென்றும் பெருமை பாராட்டிககொள்கிறாயே! வேறெவராவது பரதாரங்களை இச்சிப்பரேயானால், அவரைக கண்டு பிடித்துக கண்டனம செய்வதல்லவா உன் கடமை. நான் சொல்வதைக கேள். நீ செய்த அநியாயத்தையே உபாயமாகக கொண்டு என்னை ராமனிடம அர்ப்பணம் செய்து அவரைத் தோழனாகப் பெறு. நீ நிலைபெற்று வாழலாம். தம்மைத் தஞ்சமென்று அடைபவர்கள் எத்துணைக் குற்றம் செய்தவராயினும் ராமன் அவருக்குச்சரணமளித்துககாப்பாற்றுதலையே தர்மமாக உடையவர். உன்னொருவனுக காக எல்லா அரக்கர்களும் அழிந்து உன் மனைவியரைப்போல் அவர்களுடைய தாரங்களும் மங்கல நாண் இழக்கப்போகிறார்கள். ராமன ஆற்றல் எங்கே? உன் வீரப்பிரதற்றலெங்கே? அவரில்லாத சமயம் பார்த்து என்னை நீ களவாடி வந்ததே நீ எத்துணை வலிவுபெற்றவன் என்பதை நன்கு காட்டுகிறது" என்று நயமும பயமுமாகச் சீதை அவ்வரக்கனுககு உபதேசம் கூறலானாள். சீதை இவ்வாறு காட்டிய கருணையும், தைரியமும் சிறையிலிருக்கும் அவள் ஏற்றத்துககுத் தகக அறிகுறிகளாய்ப் பிரகாசித்தன.

இதைககேட்ட ராவணன் அடங்காச் சினங் கொண்டு, "'அநயம்' நிரம்பப்பெற்றபொருளிழந்த அவ்வேழையைப் புகழ்ந்து என்னை இவ்வாறு அவமதிககும் உன்னை இன்றே தொலைத்து விடுகிறேன" என்று கிளமபினன.

சீதை கொஞசமேனும் அஞ்சாமல் "இந்தப் பூச்சிககுப் பயநதவள் சீதையல்ல. உன்னைச் சாம்ப லாககுவதற்கு எனககு வெகு நேரம் வேண்டுவ திலலை; பிரம ரிஷியான உன் பிதாவினிடமிருந்து கற்ற வேதத்தைப் பிறர் மனைவியான என்னை ஏமாற்றித் திருடிப் போவதற்கு உபாயமாகக் கருதி அன்று நீ அதைப் பாடிககொண்டு வந்தாய்; பின்பு உன்னை இன்னனென்று உணர்ந்தவுடன், உயிரி ழககுந் துனபத்தை ராமனிடமிருந்து நீ அடைவா யாக என்று சொல்லிவிட்டேன்; ஆகையால் மறு படியும் அவர் அனுமதியில்லாமல், உன்னைக் கொல்லவாவது, அவர் கையால் சீக்கிரம் படப் போகும் உன்போலுள்ள நீசன் ஒருவனை எரித்து என் தவத்தை வீண் செலவு செய்யவாவது நான் விரும்பவில்லை" என்று கூறினள்.

ராவணன் ராமனை இகழும் பொழுது 'அநயம் நிரம்பப் பெற்றவன்' என்ருன். அதை விளக்கு வது மூலத்தைப் படிப்பவருக்கு உபகாரமாயிருக்கு மென்றெண்ணி அதன் பொருளைச் சுருங்கக் கூறு வோம். கௌடில்யர் இயற்றிய அர்த்த சாஸ்திரத் தில் ஒருவன் செயல் புரியும்போது தெய்வத்தின்

அனுகூலத்தைப் பெற்றிருப்பது 'அயம' என்றும் பிரதிகூலத்தை யடைவது 'அநயம்' என்றும் விளக்கப்பட்டிருக்கிறது. ராமன் அநயம நிரம்பப் பெற்றவரென்றால் தெய்வத்தால் கேடுண்டவர் என்று பொருள். ராவணன் அவ்வாறு கூறித் தன்னைப் பற்றிப் புகழும் பொழுது, அத்தெய்வத்தை அடிக்கடி புடைப்பவன் தானென்று சொல்லித் தோள் தட்டினன்.

ஸ்திரீகளுடன் வந்திருந்த **தான்யமாலினீ** என்ற ராக்ஷஸஸ்திரீ ராவணனை இறுகக கட்டிக் கொண்டு, "நீர் தரும் போகங்களை அடையும் பாககியம அற்றவளை நீர் விரும்பி உம மனதைப் புண் படுத்திககொள்ளுகிறீர்கள்; வாருங்கள், நாமிருவரும் இன்புற்று விளையாடலாம்," என்று சொல்லவே, அவன் சிரித்துக்கொண்டு சீதையை விட்டுத் தன் அரண்மனையை நோக்கிப் புறப்பட்டான்.

இதையெல்லாம பார்த்துச் செவியுற்றுக கொண்டிருந்த அனுமான் ஆச்சரியககடலில் மூழ்கினர். "'ராவணன் பெயரைச் சொன்னல் உலகமே நடுங்குகிறது; நீ இப்புலலுககுச் சமானம்' என்று கூறுபவள்போல ஓர் துரும்பைககிள்ளி நடுவிலே போட்டு, அவனை வெகு அலட்சியமாகப் பேசுகிருளே; கருணை சுரந்து அவனுககு ஹிதத்தையும், உபதேசிககின்ருளே; என் அன்னையின ஆத்ம சக்தியே சக்தி! துணிவே துணிவு! இரக்கமேஇரக்கம்! ராவணன் என்ன வரம் பெற்றென்ன? அவ

னடைந்த ஆற்றலெல்லாம் இவள் தூற்றுதலுககு ஏவல் புரிகின்றது? இவன் தவம் செய்யும்போது தன் தலைகளை யறுத்துககொண்டு, வீண் துன்பத்துககுத் தன்னை ஆளாககிககொண்டான்; ஆதிசேஷனைப்போல் ஆயிரம் தலைகளைப் படைத்து, அவைகளை வெட்டி ஹோமம் செய்திருந்த போதிலும் இத்தேவியின் பாதிவிரத்யத்துககு ஈடுகாட்ட இவனால் முடியுமா?" என்றெண்ணிக்கொண்டு மேற்கொண்டு நடப்பதையும் பார்க்கலானர்.

ராவணன் சென்றபின் சீதைககுக் காவலாக ஏற்பட்டிருந்த கோரஸ்வரூபங்களெல்லாம், அவன ஆணையின்படி அவளைச் சூழ்ந்து கொண்டு நால் வகையிலும நலிவுசெய்யத் தொடங்கின. "நீங்கள் என்னைத் தின்றுவிட்டாலும் சரி, உங்கள் வார்த்தை என் செவிககுள்புகாது" என்று ஒரே சொல்லாக ஜானகி அவர்களுக்குச் சொல்லிவிட்டாள். மானைத் துரத்திப்போன ராம லக்ஷ்மணர்கள் க்ஷேமமாய் மறுபடியும் ஒன்றுகூடி உயிர்பிழைத்திருக்கிறார்களாவென்ற எல்லையற்ற விசாரத்தில் அரக்கிகள் கூறிய வார்த்தைகள், புண்ணில் கோலிடுவது போலிருந்தன. ஜானகியின் காவலாளிகளைக கம்பர் வெகு அழகாகப் பின்னுள்ள பாசுரத்தில் பாடியிருககிறார்.

"வயிற்றிடை வாயினர் வளைந்த நெற்றியிற்
குயிற்றிய விழியினர் கொடிய நோக்கின

ரெயிற்றினுக் கிடையிடை யானையாளி பேய்
துயிற்கொள் வெமயிலனெனத் தொட்ட
வாயினர்''

துககம் தாங்க முடியாமல தன் சடையை மரககிளை யில் முடிந்து தூக்குண்டு உயிர் துறந்து விடுவ தென்று கடைசியாகச் சீதை தீர்மானிக்கலானாள். இதற்கிடையில் 'திரிசடை' என்றவரககி யொருத்தி நித்திரை நீங்கியெழுந்து சீதையைத் துனபுறுத்திக கொண்டிருந்த கொடிய அரககிகளைப் பார்த்து, "சீதையை விடுங்கள், அவள் பாதங்களில் விழுங் கள்; அவளை உயிர்ப்பிச்சை வழங்கும்படி வேண்டிக கொள்ளுங்கள்; கண்டுவிட்டேன் கனவு ஒனறை! அழிந்துவிட்டார்கள் அரக்கர்கள் யாவ ரும்; வந்து விட்டது காலம் உங்கள் ராவணருககு" என்று சன்னதம் வந்தவள் போல் மொழி பொழிய லுற்றாள். மனிதரைக் கொன்று தினபதற்குத் துணிந்த அவ்வரககிகளும், மிகக மூட நம்பிககை யுடையவர்கள். கனவு என்று சொலலவே மனங் கலங்கி நடு நடுங்கிச் "சொல்ல வேண்டுமம்மா நீ கண்ட கனவை" எனறு அவளை வேண்டினார்கள். "ராமன், லக்ஷ்மணனுடனும், சீதையுடனும் நான்கு தந்தங்களுடைய வெள்ளையானையின் மேலேறி வடககே சென்றார்; செல்லும்போது சீதை நின்று கொண்டு ஆகாயத்திலுள்ள சந்திரனைத் தன் கை யால், ஸ்பரிசித்தாள்; ராவணன், கும்பகர்ணன், இந்திரசித்து முதலிய எல்லா அரககர்களும் எண் ணெய் சொட்டச் சொட்ட, ஒரு கருத்த தேவதை

யால் தெற்கே இழுத்துக்கொண்டு போகப்பட்டார்கள்; ராவணன் வழி நடுவில் ஒரு சாணக்குழியில் சறுக்கி விழுந்தான்; விபீஷணர் ஒருவரே வேறொரு வெள்ளை யானையிலாரோஹணித்து, வெண்குடைக் கீழிருந்து அரக்கர்கள் நால்வருடன் வட திசையை நோக்கிச் சென்றார்; குரங்கொன்றுவந்து லங்கையைத் தீயிடக்கண்டேன; சீதையை யடைந்து விட்டது நற்காலம்; அவள் ராமனுடன் சேர்ந்துவிட்டாள், அவளைத் துன்புறுத்திய உங்களை ரகுராமன் இலக்குவில் விடப்போவதில்லை, சீதையின் கருணையால நீங்கள் உயிர் தப்ப உபாயம் உண்டாகுமே யொழிய வேறு வழியில்லை'' என்றனள் திரிசடை. அனுமான் பின்திச் சொல்லும் பொழுது அவ்வரக்கிகள் சீதையைத் தண்டனிட்டு அத்தேவியால் அபயமளிக்கப்பட்டார்களென்று தெரிகிறது. அதைக் கவி சொல்லாவிடினும் கபி நமக்குப் பிரமாணமாகிறார்.

கனவு கேட்ட அரக்கிகள் சோர்வடைந்து தூங்கத் தொடங்கினர். சீதைக்குப் பல நற்சகுனங்களுமுண்டாயின. புதுச்செல்வம் படைத்த ஒருவனை யண்டிப் பிழைப்பவர்கள் வந்தடைவதுபோல அச்சகுனங்கள் அவளிடம் தோன்றின எனக் கவி இங்கு கூறுகிறார். திரிசடை கனவும் நற்சகுனங்களும் சீதை இறக்கக் கொண்ட எண்ணத்தை இளக்கச்செய்தன. கனவும் சகுனமும் ராமாயணத்தில் மிகவும் ஆதரவு பெற்றிருப்பவை. கனவென்பது பொய்த் தோற்றமல்ல; ஜீவனுக்கேற்படும் உண்

மையான அனுபவம்தானென்று விசிஷ்டாத்வை திகள் சித்தாந்தித்திருக்கிறார்கள். அத்தகைய அனுபவம் சீதைக்கு ஏற்பட வேண்டியிருக்க, திரிசடைக்கு உண்டானதுதான் இங்குள்ள விசேஷம். சீதையோ "சொப்பனங்கூட ராம லக்ஷ்மணர்களை எனக்குக் காட்டாமல் என்னிடத்தில் இவ்வாறு விரோதத்தைப் பாராட்டுகிறதே" என்று புலம்பினாள். சீதைக்குத் தம்மைத் தெரியப்படுத்தி அவளைத் தேற்றுவதற்கு இதுவே தருணமென்று அனுமானும் எண்ணினார்.

"சீதை நம்மைக் கண்டு நம்பிக்கை பெற்று நாம் தேவியைத் தேற்றுவதெப்படி? இருபிறப்பாளரைப் போல் ஸம்ஸ்கிருதம் பேசின் ராவணனென்று நம்மை எண்ணிச் சீதை அஞ்சலாம்; ஆனாலும் மானிடர் பாஷையை நாடிப் பொருள் விளங்கப்பேசல்வேண்டும். இதற்கென்ன உபாயம்? இத்தேவியுடன் உரையாடி இவளைத் தேற்றிப் போகாவிடில் மோசம் வந்துவிடும். சரி; ஒன்று செய்வோம். வேதகோஷத்தை உச்சரித்துக்கொண்டு இவளை ராவணன்முன் ஏமாறச் செய்ததற்குப் பிரதியாக நாம் ராமாயணத்தைப் பாடி இவள் நம்பிக்கையைத் தட்டி யெழுப்புவோம்". இவ்வாறு அனுமான் தீர்மானமடைந்து 'ராஜா தசரத:' என்று ராம கதையைத் தொடங்கலானார். இவர் பாடியதை வால்மீகி மிகவும் மெச்சி, இனிமை இது, வீணற்றது இது, என்று கூறுகிறார். வால்மீகி

யென்பதற்குப் பூமிதேவியின் செவியிலிருந்து பிறப் படைந்தவரென்று நிகமாந்த தேசிகன் பொருள் கூறுவதுண்டு. அதற்கிசைந்தவாறு அம் முனிவ ராகிய ராமாயணம் பூமியில் தோன்றியோர் செவி களை யெல்லாம் இனிதுறச் செய்கின்றது. ஆனல் பூமாதேவிககு நேர் மகளான சீதையின் செவி களுககு இனிமைதரப் பாடி அவள் மனங்குளிரு மாறு தாபத்தைப் போக்கியது, அனுமான் பாடிய ராமாயணம். அதை இனிது, வீணற்றது என்று வால்மீகி திருவாய் மலர்ந்தருளியது கேவலம் துதி யல்ல; உண்மையே.

சீதை உகந்த அவள் மாமனர் தசரதரை முன் னிட்டுககொண்டு அந்த க்ஷணம் வரையில் நடந்த கதையை வெகு சுருககமாயும் அழகாயும், அந கபீ வேந்து பாடுவதைக கேட்டாள் ஜானகி. ஆச்சரிய மடைந்தாள். சுற்றுமுற்றும் பார்த்தாள். கீழே தன் தாயையும் நோக்கினள். மேலேயும் கண் களைச் செலுத்தினள். கண்டனள் ஒப்பற்ற அறிவு பெற்ற அனுமானை. வெள்ளை வஸ்திரம் தரித்து ஹனுககள் மேலும் கீழுமசைய அவர் இசைபாடும் காட்சியைக் கண்ணாரக்கண்டு, செவியாரக கேட்டுக் களிப்புற்றுள. சீதை கண்ட அனுமானை ஒப்பிடும் போது உதயமடைந்து கொண்டிருககும் சூரியனைப் போல் பார்ககப்பட்டாரென்று கவி அவரை வர் ணிககிருர். இவ்வுபமானத்தில் ஆழ்ந்துள்ள கருத் தொன்று விளங்கப்பெறும்.

ஜடாயுவை ராவணன் வெட்டித் தள்ளிவிட்ட பிறகு, அங்குமிங்கும் ஓடப்பார்த்த சீதா தேவியை அக்கொடியோன் கேசத்தைப்பற்றித் தூக்கித் தன் மடியில் தாங்கி லங்கை போவதற்கு ஆகாய மடைந்தான. அப்பொழுது அவள் 'ராமா, லக்ஷ் மணு,' வென்று திக்கற்றுக் கதறிக்கொண்டு போனுள். ஓர் பேரிருள் மூவுலகங்களையும் சூழ்ந்து கொண்டது. தர்மத்தைக் காணுமே! சத்தியம் செத்துவிட்டதா? இரக்கம் எங்கே போயிற்று? ஒழுக்கம் ஒடிப்பதுங்கிய இடம் தெரியவில்லையே? ராமனுடைய சீதையை ராவணன் திருடிப் போகி ருனே என்று இமையவரும் பார்வையிழந்து பரி தபித்தார்கள். அக்காலத்திலுண்டான இருள் அனுமானை சீதை காணும்வரையில், அகலாமலே ஆட்சி பெற்றிருந்தது. ராமன் கிஷ்கிந்தா காண் டத்தில் அவ்விருள் நடுவேதான் வாலியை வதம் செய்தார். ஆதலால் அவர் செயலிலுள்ள தருமம் சற்றும் விளங்காமல், இன்றும் நாம் தர்க்கிப்ப தற்கு அவகாசம் கொடுத்துக் கொண்டிருக்கிறது. அனுமான் ராம நாமாங்கிதமான மோதிரத்தை யடைந்து, அதன் பிரபாவத்தால் கடலைக் கடந்து இலங்கை சேர்ந்து, தேவியைத் தரிசித்து, அவளும் இவரைக் கண்டதுமே, தர்மமுண்டு, சத்தியமுண்டு இரக்கம் இறக்கவில்லை, ஒழுக்கம் ஓடிப்போக வில்லையென்பது பிரகாசிக்கலாயிற்று. சூரியோ தயத்தைக் கண்டதுபோல அவற்றை மூடியிருந்த

அப்பேரிருளும் அகன்று போயிற்று. அதைத் தான் கவி அனுமானுக்கிட்ட உபமானத்தால் நமக்கு உணர்த்துகிறார்.

சீதை தம்மைத் தெரிந்து நோகுவதை அனுமான் அறிந்து விருக்ஷத்தைவிட்டுக் கீழே யிறங்கித் தேவியின் சமீபம்வந்து அவளைத் தொழுது, "விதேகமன்னர் புதல்வியே! என் தாயே! க்ஷேமம், உம்முடைய ராமன்; உம்மையும் க்ஷேமம் கேட்டார்; உம் பர்த்தாவுடன் இணை பிரியாதவரான லக்ஷ்மணனும் வெகு துக்கத்துடன் தங்களைத் தண்டம் சமர்ப்பிவித்தார்" என்றார். இதைச் செவியுற்ற சீதையின் மனக்கூட்டிலிருந்து ராம லக்ஷ்மணர்கள் விஷயமாய் அவள் கொண்ட துயரங்களெல்லாம் இறகைகை பெற்ற பறவைக குஞ்சுகளைப்போல பறந்தோடிப் போயின. இன்றும் அனுமானுடைய ஆசாரத்தைப் பின்பற்றி யாரைப் பார்க்கும் போதும், யாருக்கு எழுதும்போதும் க்ஷேமமென்றுதான் தொடங்குகிறோம். பிறவி துவக்கி விபத்துக்கள் நடுவில் அகப்பட்டிருக்கும் நாம் கூறத்தக்க முதல் வார்த்தை இவ்வார்த்தையே என்று காளிதாஸர் மேக சந்தேசத்தில் அழகாகப் பாடியிருக்கிறார். அடுத்து வரும் தேற்றல் பகுதி இதையே மங்களமாகக் கொண்டு ஆரம்பமடையும்.

# தேற்றல் பகுதி

அசோக வனத்தில் சீதைகொண்ட சோகத்திற்கு ஆணிவேர்கள்போல் இருந்தவை மூன்று. மாயமான் பின் சென்ற ராம லக்ஷ்மணர்கள் திரும்பவும் ஒன்றுகூடி உயிர் பெற்றிருக்கின்றார்களா? நிசாசரிகள் நடுவில் அகப்பட்டுக்கொண்டு இவ்வாறு அவஸ்தைப்படும் தமக்கு விடிவுகாலம் உண்டா? திரிகரணசுத்தமான தம் கற்பின் நிலை ராமன் உள்ளத்தில் என்றும்போல் குன்றாமல் இருக்கின்றதா? என்பதே அவை. இம்மூன்றில் ஒன்று சிறிது தலை சாய்ந்தால், மற்றவை தலையோங்கி மாறிமாறித் தேவியை மனம் நோகச் செய்து வந்தன. அத் துன்பத்தைப் பொறுக்க மாட்டாமல் அவள் உயிர்நீக்க முயற்சியுடையவளானாள். அத்தருவாயில், அனுமான் தோன்றி சீதையைத் தேற்றி அவளுக்குப் புத்துயிரளித்தார். ஜகத் பிராணனென்று தன் தந்தை கொண்ட பேருக்குத் தக்க மைந்தன் தானே என்பதையும் நன்கு காட்டலானார்.

சீதைக்கு க்ஷேமம் உரைப்பதற்கு முன்னதாகவே அனுமான் அழகும், பொருளும், அறிவும் சிந்தும் சில விண்ணப்பங்களைச் செய்தார். "உம்

முடைய திருக் கண்களிலிருந்து துக்கஜலம் எதற்காகப் பெருகுகின்றது?" என்று அநுமான் வினவியதை விளக்கும்போது 'யார் குடி வேரற' என்று பட்டரும், 'யாரை சேதனராகக் கொண்டு' என்று பிள்ளானும் பணித்துள்ளார்கள். சேதனர் என்றால் போக்தா; யாருடைய போகார்த்தம் என்றபடி. "தாமரை இதழிலே முத்துப் பட்டாற்போல் இருக்கிற இந்த ஸௌந்தர்யத்தை அநுபவித்தலுக்கு அருகரான பெருமாள் அருகே இன்றிக்கே இருக்க இதற்குப் பிரயோசனம் இன்னது என்றபடி." சீதை அழப்பெற்றதாலே மூவுலகங்களும் அழுதல் ஒழிந்து ஆனந்தமடைந்து உய்வதற்கு ஹேது உண்டாயிற்று, என்பதே நாம் இங்கு நினைப்பது. 'பகைவர் சேனையைத் தபிக்கச் செய்யும் தசரத மன்னவருடைய மணட்டுப்பெண் நான்' என்று சீதை அநுமானிடம் சொல்லிக் கொண்டதற்கும் விசேஷப் பொருள் கூறுவர். 'பிராட்டி தனக்குப் பேற்றுக்கு உடலாக நினைத்திருப்பது சக்ரவர்த்திமருமகள் என்னும்இத்தையே காணும்.' 'என் மாமனார் உண்டாகில் எனக்கு இவ்விருப்பு இருக்கவேணுமோ! சத்துருக்களும் ஜீவிக்க ஜீவித்தவரோ அவர்' என்பார்கள்.

இங்கு அநுமானும், ஆரண்ய காண்டத்தில் சன்னியாசி வேடம் பூண்ட ராவணனும் சீதைக்குச் செய்த பிரச்னங்களின் சொற்கள் மிகவும் ஒற்றுமை பெற்றிருக்கின்றன. ராவணன் சொல்

விய பாசுரமொன்றை மாறுதலின்றி மாருதி இங்கு படிப்பதும் கருதத் தககது. அதாவது, ருத்ரர்கள் மருத்துககள் அல்லது வஸுககள் இவரில் ஒருவ ரான தெய்வப் பிறப்போ நீர், என்று சீதையைக் கேட்டது ராவணன் கொண்ட காமத்திற்கும், அனு மான் கொண்ட பகதிககும நெருங்கியுள்ள சம்பந்த மொன்றை உணர்த்துகிறது. இருவர் மொழிகளி லும் உள்ள ஒற்றுமை, தர்மத்திற்கும், தனக்கு முள்ள விரோதத்தை முற்றிலும் போகவிட்ட காமமே பக்தி எனப்படுமென்பதைக் காட்டுவதா கும். ஸ்ரீ கிருஷ்ணன் கீதையில் 'தர்மத்துடன் பகையின்றி இருககும் காமமே நான்' என்கிறார். நம் காமங்கள் நல்லோருக்கு அடிமை புரிய உதவும்போது அவற்றிலுள்ள அழுக்கு களெல்லாம் அற்றுப்போய் பகதியாகமாறி விளங்கு கின்றன. ராவணனும் சீதையிடம் கொண்ட தீககருத்தைத் தொலைத்து, அனுமானைப்போல் அத்தேவியை வழிபட நினைந்திருப்பனுல், அவன் சொல்வன்மை பயன் உடைத்தாகிப் பேரும் புகழும்பெற்று அவன் வாழ்வதற்கு இன்றியமை யாது இருக்குமே என்ற கிருபையுடன் வால்மீகி இருவர் பேச்சிற்கும் உள்ள நெருங்கிய உறவை நமக்கு அருளியிருக்கிறூர். ராவணன் சீதையின் மேலழகைக் கண்டானேயல்லாது அவ்வழகிற்கும் அழகு செய்யும் அவள் கற்பைக காண்பதற்கில் லாத குருடனுகவே இருந்தான். இதற்கு அவன்

உரை செய்த ஒரு சொல்லே தக்க அறிகுறியாக ஆயிற்று. சீதையைப் பார்த்து "ஸ்வைரசாரிணி யான ரதி தேவியோ நீ" என்றான அப்பாவி யரக்கன். ஸ்வைரசாரிணீ என்றால கற்பைக கருதாது தன் இச்சைப்படி வாழும் ஸ்திரீ என்று பொருள். அனுமானே சீதையின பாதிவிரதயத்தையே தம பகதிக கண்ணால பிரதானமாகக கண்டு உலகப் பதிவிரதைகளுக்கெல்லாம உபமானமாக உள்ள அருந்ததி தேவியை நினைந்து " அவரே தான் நீரோ?" என்றார்.

ராம லக்ஷ்மணர்களுடைய க்ஷேமத்தை உணர்த்தியதுடன் அனுமான், சுகரீவ மகாராஜன் சீதையை க்ஷேமம் விசாரித்ததையும் தெரிவித்தார். ராமன் க்ஷேமம கேட்டாரென்று சொல்லுமபோது "வேதங்கள மட்டும் அறிந்தவரல்ல, பிரம்மாஸ்திரமும் அவருக்குத் தெரியும்" என்றார். வேதங்களால் ராமன் அறிந்தது பதி பத்னி என்ற இருவரும் ஒருவரே யென்பது. அவ்வாறுள்ளவரைப் பிரியச் செய்த ராவணன் நெஞ்சைப் பிளப்பதற்காக அவர் பிரம்மாஸ்திரத்தையும் கைககொண்டிருக கிறார் என்ற கருத்தையும் அமைத்து அனுமான் அவ்வாறு கூறினார். அதுவே சீதையின் தேற்றலுக்கு ஆரம்பப்படியாக ஏற்பட்டது. உயிர் பிழைத்திருந்தால் ஆண்டுகள் நூற்றுக்குப் பிறகாவது ஆனந்தம் ஒருவரை அடைவது நிச்சயம் என்ற உலகமொழி உண்மையே என்றாள் அனுமானைக் கண்ட சீதை. இவளிங்கு சொல்லியதை

உடனிருந்து கேட்டவர்போல் அனுமானிடமிருந்து ராமன் க்ஷேமத்தை யறிந்த பரதனும் சொல்லப் போகிறார். ஆண், பெண் என்ற வேற்றுமையற்ற தாக இருந்தது இருவரும் ராமனைப் பிரிந்து பட்ட பாடு என்பதை நாம் உணரும்படி இருவரும் ஒரு விதமே கூறினார்கள்.

ராவணனே இவ்வாறு வந்து தோன்றுகிறான் என்று அனுமானைப்பற்றிச் சீதை கொண்ட சந்தே கங்களெல்லாம், அவர் ராமகுணங்களை எடுத்துக் கூறக்கூற, குறைவுபட்டுக் குறைந்துபோயின. நெடுங்காலம் அனுபவித்து இழந்துபோன ராம னுடைய அழகையும் அங்க அடையாளங்களையும் எடுத்துரைக்கும்படி அனுமானை வினவினாள். அதைக்கேட்ட அனுமான் 'அளவிறந்த அருள்பெற் றோம்' என்று தம்மைத்தாமே மெச்சிக்கொண்டு பேசத் தொடங்கினார். ராவணன் இடது கையால் தன் கூந்தலைப்பற்றி வலது தொடையில் தனனை வைததுககொண்டு போனதால் நிகழ்ந்த துககமும் தோஷமும் தொலைந்துபோகும்படி "ராமன் துடை கள் எப்படி? கைகள எப்படி?" என அனுமானைச் சீதை வினவினளாயினும ராமன் கண்ணழகிற்குத் தோற்றவராகையால், தாமரை இதழ் போன்ற அழகிய கண்ணுள்ளவர் ராமன் (ராம: கமல பத் ராக்ஷ:) என்றே அவ்வழகனை அனுமான் வர்ணிக்க ஆரம்பித்தார். உறுப்பிலககணங்களுக்கெல்லாம் இலககியமாயிருக்கப் பெற்ற ராமனுடைய ஒவ்

வொரு அவயவங்களையும் ஸாமுத்ரிக சாஸ்திரத்தின் முறையைத் தழுவி அனுமான் குறிப்பிட்டபோது ராமனே முன்வந்து நிற்கின்றனரோ எனச் சீதை நினைக்கும்படி இருந்தது.

பிறகு "நரர்களும் வானரர்களும் ஒன்றுகூடியதெப்படி" என்று சீதை அனுமானைப் பிரச்னம் செய்தாள். "என் அன்னையே அன்று நீர் உம் வஸ்திரத்தில் கட்டி எங்கள் நடுவில் போட்ட உம் அணிகளே காரணமாக நின்று உம்மைத்தேடி வந்து கொண்டிருந்த ராம லக்ஷ்மணர்களை எங்களைத் தேடி யடையச் செய்தன. நானே அவர்களிடம் தூது சென்று என் தோளில் அவர்களை எழுந்தருளப்பண்ணி, சுகரீவனிடம் கொண்டுவந்துவிட, ராம சுக்ரீவர்கள் இருவரும் தோழமை புரியலானார்கள். வாலியைக் கொன்று வானர அரசை சுக்ரீவனுக் கீந்தார் ராமன். சுகரீவன் உம்மைத்தேடிக காண்பதற்காக நாற்றிசையிலும் பலகோடி வானரங்களைப் போகவிடுத்தார். தென்திசை தேடும்படி ஆக்கினைபெற்ற அங்கதன் ஜாம்பவான் இவர்கள் தலைமையில் புறப்பட்ட குரங்குகளில் நானொருவன்: அவர்கள் நியமனத்தால் கடலைக் கடந்து, இங்கு வந்து உம்மைக் காணும் பாக்யத்தைப்பெற்றேன்; இவ்விதம் நிகழ்ந்தது ராமனும் சுகரீவனும் ஒன்றாகிய கதை" என்றனர் அனுமான. எவ்விதம்? என்று வினவிககொண்டு ஈட்டில் விளககப் பெற்றிருப்பதாவது:—"இளைய பெருமாள் கையும் வில்லு

மாய் உணர்ந்துகொண்டு நின்று நோக்கக் கடவ அந்தப்புரக் காரியத்திற்கு அடியேன் வருமபடியன்றோ அவர்கள் ஸங்கதரானபடி. இளைய பெருமாள் அடிமையில் தப்பி நின்றவளவுக்கும் திருவடியைக் கொண்டு இழையிடவேண்டும்படியாகவிறே அவர் நிலவரானபடி" (நிலவர்—அந்தரங்கர்).

தம்மிடம் சீதை பூர்ண நம்பிக்கை பெற்றுவிட்டதை உணர்ந்து, ராமனிடமிருந்து தாம் பெற்றுவந்த அடையாள மோதிரத்தை அத்தேவிக்குக் காட்டலானர். 'பார்க்கவேணும் என் அன்னையே! ராம நாம முத்திரையுடன் விளங்கும் இக் கணையாழியை; நும் நம்பிக்கைக்கு ஓர் அடையாளமாகக் கொண்டுவந்தேன் இதை' என்று சீதையிடம் கொடுத்தார். தன் பர்த்தாவின் கரவிபூஷணத்தை அவள் கையில் வாங்கி வைத்தகண் மாறாதே பார்த்துக் கொண்டிருந்தாள். அன்று தான் கையும் கணையாழியுமாய்ச் சிவதனுசை ஒடித்துத் தன்னை ராமன் வந்து கைப்பிடித்ததுபோல் ஓர் தோற்றத்தைப் பெற்று லஜ்ஜை யடைந்தாள்.

கணையாழிக்கும் காதலுக்கும் ஓர்வகை சம்பந்தம் தொன்றுதொட்டுள்ளது. 'துஷ்யந்த' என்று நாம முத்திரையுள்ள மோதிரத்தைச் சகுந்தலையிடம் தந்து," இதிலுள்ள அக்ஷரங்களை ஒவ்வொரு பகலுக்கோர் எழுத்தாக எண்ணிக்கொண்டு வந்தால் அது முடிவடையுமுன் என் அந்தப் புரத்திற்கு உன்னை அழைத்துப்போவதற்கு வருவோரை நீ காண்பாய்

என்று துஷ்யந்தன் சகுந்தலைக்குச் சொல்லிப் போனனென்று சாகுந்தல நாடகத்தில் நாம் படிக்கிறோம். இங்கு ராம: என்று இரண்டு அக்ஷரங்கள் உள்ள மோதிரத்தை அனுப்பியது மாதமொன்றிற்கு ஓர் அக்ஷரமாய் எண்ணிக்கொண்டு வர அது முடியுமுன் சிறை நீங்கி ராமனுடன் சேரப் பெறுவள் சீதை என்பதைத் தொனிப்பிக்கின்றது. ஆனல் துஷ்யந்தன் தான் சொன்ன சொல் தவறி சகுந்தலையை அடியோடு மறந்துபோயினன். அனுமான் தந்த கணையாழியின் பிரபாவமோ அவ்வாறின்றி, ராம லக்ஷ்மணர்களும் பலகோடி வானரங்களும் இலங்கை வந்து சேர்ந்து சீதை சிறை மீள ஏதுவாயிற்று.

மோதிரம் கொணர்ந்த அனுமானை வெகுப்ரீதியுடன் சீதை போற்றுகையில் அம்மஹா கபிக்கு உத்ஸாஹம் தலை எடுத்து, "இக்கணமே இம்மோதிரத்திற்கு உடையவரான உம் பர்த்தாவிடம் உம்மை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு போய் சேர்க்கிறேன்; விடை அளிக்கவேணும்" என்றார். அவர் சிற்றுருவை நோக்கிய சீதை "குரங்குத் துணிவோ இது?" என்று புன் சிரிப்புடன் மொழிய, அனுமான் அவளுக்குத் தன் விசுவரூபத்தைக் காட்டி, "இந்த லங்கையையே தங்களுடன் பறித்தெடுத்துப் போகவேண்டுமோ?" என்றார். "உன் பேராற்றலை நான் அறியாதவளல்லள் ஆயினும், உன்னுடன் வருவது உசிதமாகாது. ராமனே ராவணனை அழித்து என்னை மீட்டுச் செல்வதே தகைமை பெற்றதாகும். அவருடைய ரக்ஷக குணத்

திலுள்ள பூர்ணமான நம்பிக்கையே அவரைப் பிரிந்த என்னை உயிர் தரித்திருக்கச் செய்கிறது. கீர்த்தியே பெரிதாக நினைக்கும் அவர், நான் உயிர் பெற்று இருப்பதே உயர்வெனக் கருதுமாறு நீ உரையிடல் வேண்டும். உன் சொல் திறமே உனக்கெல்லா அறப் பயன்களையும் கூட்டி வைக்கும். நீ என்னைச் சுமந்து போவதற்கு நான் உடன்படுவது என் ஸ்திரீத் தன்மைக்கு ஒவ்வாதிருப்பதோடு, ராமனைத்தவிர எந்தப் புருஷர்களையும் தொடுவதில்லை என்று நான் கொண்டிருக்கும் விரதத்திற்கு பங்கத்தைத் தருவதுமாகும். ராவணன் தொட்டானென்றால் அது கேவலம் பலாத்காரம்" என்றனள் சீதை. இதைக்கேட்ட அனுமான் "என் அன்னையே, இவ்வாறு கூறநீரே தகுதி பெற்றவர்" என்று தேவியைக் கொண்டாடினர். ராமனுக்கு எடுத்துப் போகும் அடையாளங்களைத் தரும்படி வேண்டி அவளைத் தொழுது நின்றார்.

'சித்திர கூடத் திருப்பச்
சிறு காக்கை முலைதீண்ட
அத்திரமே கொண்டெறிய
அனைத்துலகும் திரிந்தோடி
வித்தகனே இராமாவோ!
நின் அபய மென்றழைப்ப
அத்திரமே யதன் கண்ணை
யறுத்ததுமோர் அடையாளம்,

என்று பெரியாழ்வார் பாடிய, லக்ஷ்மணனும் அறியாத ரகஸ்ய விருத்தாந்தத்தை முதலடையாளமாக சீதை எடுத்துரைத்தாள். இப்பாசுரத்தில்

சொல்லப்பட்ட சிறு காக்கை மஹேந்திரன் மைந்தன்; காக்கை உருவெடுத்துக் கீழுலகம் வந்தவன். தான் கொண்ட வேடத்திற்கேற்ப பிண்டம் கொத்தும் புத்தியைப் பெற்று சீதையின் தனங்களைக் கொத்தினன். அவனைக் கொல்லுவதற்குக் கொண்டெறிந்த அத்திரம் பிரமாஸ்திர மந்திரத்தைப் பெற்ற தர்ப்பைப்புல். அவன் கண்களில் ஒன்றையறுத்து அவனை உயிர் தப்பிப் போகச்செய்தது. ராமனை அவன வலம் வந்து, "உமக்கோர் நமஸ்காரம்: உம்மையீந்த தந்தைக்கோர் நமஸ்காரம்" என்றுரைத்துத் தன்னிருப்பிடம் சென்றான். அனைத்துலகிலும் அபயம் பெறுவதற்கு அவன் திரிந்தோடியபோது 'ராமனைச் சரணம் புகு, அவர் உன்னைக் காப்பாற்றுவார்' என்றவனுக்குபதேசம் செய்தது ஸ்வர்க்கத்திலிருந்த தசரத மன்னரே என்று தொனிக்கிறது. தன் தந்தை கைவிட்டார். ராமன், தந்தை வழிவிட்டார் என்றும் ஏற்படுகிறது. அடுத்த அடையாளமாகச் சீதை அனுமானுக்குத் தந்தது, அவள் வஸ்திரத்தில் முடிந்து வைத்திருந்த சூடாமணி. அது அவளுக்கு மாமனாரான தசரத மகாராஜர்* அளித்த வதுவைச் சீர். அதை அவள் சிரத்தில் அணிந்து கலியாண காலத்தில் தசரதர்,

* ஜனகர் அளித்ததாரென்பர் சிலர். ஆனால் பின்பு 'இம் மணியைப் பார்க்கும் பொழுது என் பிதாவையே காண்பதுபோல் இருக்கிறது' என்று ராமன் சொல்லப் போவதை நன்குணர்ந்தால் தசரதரே கொடுத்த வதுவைச் சீரென்று ஏற்படும். தசரதர் ஆக்கிய வேள்வியால் மிகவும் சந்தோஷத்தையடைந்த இந்திரன் வருங்கால் மறிந்தே இம்மணியை தசரதருக்கு உதவினார்.

ஜனகர் முதலிய பெரியோர்களை ஸேவித்தபோது பெற்ற ஆசீர்வாதங்களெல்லாம் இன்று பலித்தன என்று நினைத்து, சீதை அனுமானுககோர் அடையாளமாகக கொடுத்தாள். கடைசியாகத் தன் நெற்றிப் பொட்டழிந்த காலத்தில், மனேசிலைக் குழம்பால் ராமன் தன் கன்னத்திற்குப் பொட்டிட்டார் என்று உரைத்தாள். பொட்டு அணிந்தபோ திருந்ததை விட, இருவருமே ரமிககையில அது அழிந்து போனபோது உள்ள சீதையின் முகத் தழகு திருஷ்டிதோஷம் வரும்படியாக அவ்வளவு அதிகரித்திருந்தது. அத் தோஷத்திற்குப் பரிகார மாக ராமன் கன்னத்திற்குப் பொட்டிட்டார் என் பது இஙகுள்ள கருத்து.

இம்மூன்று அடையாளங்களால் முறையே ராம னுடைய உத்ஸாகத்தையும், தன் தூய்மையிலுள்ள நம்பிககையையும், அவர் தன்மேல் கொண்ட காதலையும் தட்டி எழுப்பி, தன்னை மீட்டுச் செல் லுமபடி சீதை பிரார்த்தித்தாள் போலும்.

இவ்வாறுள்ள அடையாளங்களைப் பெற்ற அனுமான தேவியை வலம் வந்து, அவள் ஆசீர்வா தங்களைப் பெற்று வேறிடம் அகன்றார். மற்றுமித் திசையில திருத்தத் தகக காரியங்கள் ஏதேனும் உண்டோ என்று ஆலோசிக்கலானார். அதன் பயனாக ஏற்பட்டது, அடுத்து வரும் பகுதிககு விஷயமாக உள்ள அவரது ‘திறல் விளங்கல்’.

'ராமனுகிற பரமாத்மாவைப் பிரிந்த சீதை யாகிற ஜீவாத்மாவை அனுமானுகிற ஆசார்யன் பகவானுடைய ரக்ஷக குணங்களை நன்கெடுத்துக் கூறித் தேற்றினர். அந்த ஜீவாத்மாவிற்குச் சரீர மாக உள்ளதே லங்கை. அவ்வூரைச் சூழ்ந்துள்ள சமுத்திரமே ஸம்ஸாரம். கொழுப்புற்ற பத்து இந்திரியங்களைப் பெற்றிருக்கும் மனதென்பது பத்து தலைராவணன்' என்று இப்பகுதியிலுள்ள விஷயத்திற்கு ஸ்வாபதேசப் பொருள் கூறுவர் ஸ்ரீ நிகமாந்த தேசிகன்.

# திறல் விளங்கல் பகுதி

வீரிய லாபம் அல்லது திறல் விளங்கல் என்பது பிரும்மசரியம் நிலைபெற்று விட்டதைக் காட்டும் என்பர் பதஞ்சலி.*

"திறல் விளங்கு மாருதியோடமர்ந்தான் தன்னை" என்று அனுமான் திறலையிட்டே ஸ்ரீ ராமனைச் சிறப்பிக்கிறார் குலசேகர ஆழ்வாரும். ராவண அந்தப்புரத்திலுள்ள சுந்தரிகளைக் கண்டு மனச்சலிப்பின்றி இருந்ததும், மண்டோதரியைக் கண்டு மதி மயக்கம் கொண்டபோதும், சீதை என்றே அவளைக் கருதியதால், அயல்மாதரிடம் தாய் என்ற பாவனையே தலைநிமிர்ந்திருக்கப் பெற்றதும் அனுமானுடைய பிரம்மசரியத்தின் உள் வலிமை அல்லது அகத்திறலுக்கு அறிகுறிகளாக விளங்கின. அசோக வனத்தை அழித்து, அரக்கர்களைக் கொன்று, லங்கையைச் சுட்டு, ராவணனைக் கண்டு அச்சமுறாமல் அவனுக்குப் புத்தி புகட்டியது அனுமானுடைய பிரும்மசரியத்தின் புறத்திறலைக் காட்டுவதாகும்.

மேலும் 'கண்டேன் சீதையை' என்று அத்தேவியின் கற்பின் ஒப்பற்ற மேன்மையை உணர்ந்து, இவர் உரையிடப்போவதற்கு, இவ்வாறு அகத்திறலையும் புறத்திறலையும் அத்தாட்சியாகக்

* ब्रह्मचर्यप्रतिष्ठायां वीर्यलाभः ।

கொண்ட இவருடைய பிரும்மசரியம் இன்றியமை யாததே. சிற்றின்பத்திற்குச் சாஸ்திரம் இயற்றிய வாத்ஸாயனரும், தம்முடைய மகத்தான பிரும்ம சரியத்தாலேயே அவ்வின்பத்தின உண்மையை அறிந்ததாகச் சொல்லுகிறார்.* அவ்வாறிருக்க, பேரின்பத்தையே உயிராகப் பெற்ற கற்பைக் காணுவது இந்திரிய நிகரஹத்திற்கு உச்ச நிலையாக உள்ள பிரும்மசரியம் இன்றி எவ்வாறு சாத்திய மாகும்? 'கற்புடைய மாதர் பெய்யெனப் பெய்யும் மழை' என்றார் திருவள்ளுவர். 'அம் மாதர் குளி ரெனக குளிரும் நெருப்பு' எனபதைக கவி நமக்கு இங்குக காட்டப்போகிறார்.

இந்நாளில் அணுகுண்டுகள் முதலியவற்றைப் பெய்து உயிர்களையும ஊர்களையும் அழிப்பது இயல் பாய் இருப்பினும் அனுமான் காலத்தில் அவை போன்ற செயல்கள் அற முறைககு விலக்கென்றே கொள்ளப்பட்டு வந்தன. எனினும் அனுமான் லங்கையைச் சுட்டதேன்? இதன் காரணத்தைக் கூறுவோம்.

ஆத்மைசுவரியம் என்றும் பூதைசுவரியம் என் றும செல்வத்தை இரண்டாகப் பகுத்திடலாம். இவற்றுள் பூதைசுவரியம என்பது ஆத்மைசுவரி யத்திற்கு அனுகூலமாயிருத்தல், அதற்குப் பிரதி

* तदेतद्ब्रह्मचर्येण परेण च समाधिना ।
विहितं लोकयात्रार्थं न रागोऽस्य हि संविधिः ॥

வாதஸாயனா: காமஸூததிரம

கூலமாயிருத்தல, என்று இருவகையாக உணரத் தககது. அதன் முதல் வகையை அயோத்திச் செல்வத்தில் நாம காணலாம. மற்றதோ இலங்கையில் தோன்றிய நிர்மாணதிசயங்களைத் தனககு உடலாக உள்ளது. தங்கள் நியமங்களால் ஆத்மச் செல்வத்தை வளர்ககும் தவமுடைய பெற்ற ரிஷிகளுக்குத் தீங்கிழைப்பதையே இலட்சியமாகக் கொண்டது. அச்செல்வமும் அதைப்பற்றி நிற்கும் அரக்கத்தன்மை வாய்ந்தவரும் அழிந்தாலன்றி இவ்வுலகம் இயல்புடைத்திருப்பது கூடாததே. அதை அனுமான் உணர்ந்தே அதையும, அவரையும் அழித்தார்; ராவணனுககு நல்லறிவு உண்டாகி, அவன் உய்யப் பெறலாமென்பதையே உட்கருத்தாகவும் கொண்டார். அசோகவனத்தை அழித்த பின் சிற்பத் திறமையின் எல்லை நிலமாய் விளங்கிய பளிங்கு மாளிகையையும் அனுமான் இடித்துவிட்டார். இதைக கேட்ட ராவணன மனமுருகி மென்மையுற்றான் என்கிறார் கவி. அர்த்தபதி என்றும், மஹாத்மா என்றும் ராவணனை அவர் குறிப்பிட்டதும் ஆழ்ந்த பொருளுடையது. அர்த்தபதி* என்றால் செல்வத்தையும் அதனால் இயற்றிய சிற்பங்களையும் காத்து ரக்ஷிப்பவன் என்று பொருள். அத்தகைமை பெற்ற மன உயர்வால் அவன் மஹாத்மாவாகவும் இருந்தான்.

---

* अर्थस्य पति अर्थेषु पति । என இரு வகையாயப் பிரித்து இரு பொருள்கள் புராணத்தில் கூறப்பட்டுள்ளன

ஊரைக் கொளுத்த உதவும்படி அனுமான் வாலுக்குத் தீயிட்டது ராவணனே என்பதையும் நாம் மறக்கலாகாது. 'தம் அனர்த்தத்தைத் தாமே எல்லோரும் தேடி அடைகிறார்கள்' என்றுள்ள உண்மை தோன்றுமாறு அவன் குரங்கின் கையிலே கொள்ளியைக் கொடுத்தான். ஸாமம், தானம், பேதம், தண்டம் என்று சொல்லப்படும் நான்குவித உபாயங்களில் மூடர்களும், செல்வச் செருக்குற்றவர்களும், பலத்திமிர் பிடித்தவர்களுமான ராக்ஷஸர்கள் விஷயத்தில் முதல் மூன்றும் பலிதமற்றவை. நான்காவதான தண்டமே அவர்களைச் சிறிது மென்மையுறச் செய்யும் என்று கருதிய அனுமான் தன் புறந்திறலைக் காட்டித் தம்மையும் தமக்குத் தலைவர்களான ராம-சுக்ரீவர்களையும் ராவணன் பயத்துடன் நினைக்கும்படி செய்தார்.

சீதை தந்த சூடாமணியைத் தம் விரலில் அணியப் பெற்றதால் அனுமானுடைய புஜபலம் * முன்னிலும் பன் மடங்கு அதிகரித்து அவர் புரிந்த வீரச்செயல்களுக்கு அடிப்படையாகவும் ஆயிற்று. மேலும் அசோகவனம் போன்ற லங்கையிலுள்ள நிகரற்ற நிர்மாணங்களைக் கண்டதும் அனுமானே அவற்றைச் சிறப்பித்துப் பேசி

* न ह्यस्य प्राभवत् भुजः என்று மூலத்தில் காணப்படுவது ततोऽस्य प्राभवत् भुजः என்றிருத்தல் வேண்டும். மூலத்தில் உள்ள பாடத்தையே பின்பற்றினும், 'அவருடைய புஜங்கள் அதிக வலிமையை அடையவில்லையா?' என்று பொருள் கொள்ளுதலே முறையாகும். இவ்விடத்தில் வியாக்கியானங்கள் தவறிவிட்டன என்றே தோன்றுகிறது

ஞர் எனினும், சீதைக்குச் சிறையாயிருந்து அத் தேவிக்குத் துன்பமிழைக்கும் அவற்றை நினைக்க நினைக்க அவைகள் அனைத்தையும் அழித்துச் செல்வதே தகைமை பெற்றதென்று அவர் தீர்மானிக்கலானார். தென்றல் காற்று வீசுவது போல் சீதைக்கு இன்பமொழிகளைப் பேசி அவள் தாபத்தைப் போக்கிய அனுமான் இப்பொழுது புயல காற்றாக மாறி அசோகவனத்திலுள்ள மரங்கள் செடி கொடிகள் யாவற்றையும் வேருடன பறித்தெறிந்து சோக வனம என்று பெயர் மாறிப் போகும்படி அதைச் சின்ன பின்னம் ஆககினார்.

மரங்கள் முறியும் பேரொலியைக கேட்டுக் கண் விழித்துககொண்ட அரககிகள் அனுமான பேருருவைக கண்டு திடுக்கிட்டுத் திகிலடைந்து சீதையிடம் சென்று, 'இவர் யார்? சொலல வேண்டும்' என்று கேட்டார்கள். "நீ பயப்படாதேயம்மா, உண்மையை உரைசெய்திடு" என்றார்கள். "இவர்கள் உடல் நடுகக முற்றிருகக எனனைப் பயப்படாதே என்கிறார்கள்; இவர்களைப் பார்ககும் எனககு நகைககும்படி இருககிறது" என்று சீதை எண்ணலானாள். புன்னகை பொங்கும் அவள முகமும் மற்ற அங்கங்களும் புதியதோர் அழகைப் பெற்று விளங்கின. "நீங்கள் சொல்லுவது வாஸ்தவம்தான்; இக்குரங்கைப் பார்க்கும் பொழுது எனககும மிகவும் பயமாகததான் இருக்கிறது; இவனை நானறிவது எப்படி? பாம்பின் கால்

பாம்பிற்கே தெரியும் என்பார்கள்; ஆகையால் இவனை யாரென்றறிய நீங்களே தகுதியுடையவர் கள். இவன் யார்? யாது செய்யப்போகிறான்? என் பதை நீங்களே உணர்ந்து கொள்ளுங்கள். நான் இவனை ஓர் ராக்ஷஸன் என்றே நினைககிறேன்'' என் றாள். 'இவன் ராக்ஷஸன்; ராவணனே இவ்வாறு வேடங்கொண்டு வந்துள்ளான்' என்று அனுமா னைக கண்டு தான் முன்பு ஐயமுற்றதையே நிகழ் காலத்தில் சீதை அரக்கிகளுககு உரையிட்டாள். சீதை சொல்லியதிலுள்ள உண்மை மாறுதலைக கண்ட உரையாசிரியர்கள் இதற்குப்பல சமாதானங் கள் கூறியிருக்கிறார்கள். கோவிந்தராஜர் பின்வரு மாறு பொருள் கொண்ட ஸ்மிருதி வசனத்தை மேற்கோளாகக காட்டி யிருககிறார். 'விவாகத் திலும், ஊடலிலும், உயிருககு ஆபத்து நேர்ந்த காலத்திலும், எல்லாப் பொருளும் இழந்து போவ தைப் தடுப்பதற்காகவும், நண்பர்கள் பொருட்டும் பொய்மொழி கூறலாம். இவ்வைந்து சங்கடங்களி லும் பேசப்படும் பொய்கள் பாபமற்றவைகள்.' எல்லா தர்மங்களும் விலக்கு விதிககு உட்பட்டவை என்பதே நம் ஆன்றோர் கொண்ட கொள்கை. 'விலககு விதிக்கு உட்பட்ட பொது விதிபோல்' என்றிதை உபமானமாகக்கொண்டு காளிதாஸரும் கூறுவதுண்டு. 'உள்ளதை உள்ளவாறு உரை யிடுதல் சத்தியம் என்பதின் ஒரு அம்சமே. தயை முதலிய பதின்மூன்று அமசங்கள் சேரப் பெற்றிருப்பதே சத்தியமென்பதின் பரிபூர்ண ஸ்வ

ருபம்' என்று மஹா பாரதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.* "அனுமானை உள்ளபடி இவ்வரக்கி களுக்கு நாம தெரிவிப்பது அவருக்கு ஏதேனும் தீங்கை விளைவிக்குமோ" என்று சீதை அவரை மறைத்து அரக்கனென்றே கூறினளென்பது உரையாசிரியர்களின் பொதுவான அபிப்பிராயம்.

சீதை மொழிந்ததிலுள்ள நகைச் சுவையை அறியாமல் ஏதோ பெரிய தர்மப் பிழை ஏற்பட்டு விட்டதாக அதைப் பெரிதுபடுத்திச் செய்யப்பட்டு வரும் சர்ச்சைகளெல்லாம் மிகை எனறே தோன்றும். அனுமான் ராம தூதனே என்பதற்கு அரக்கி கள் அனுமானை அறியாதது, சீதைக்குப் பிரிதொரு சான்றுபோல் ஆயிற்று. அரக்கிகளை ஏமாற்ற எண்ணி சீதை அனுமான ஓர் அரக்கன் என்று கூறவில்லை. அரக்கிகளும் எவ்வித ஏமாற்றமும் அடையவில்லை. தங்கள் வினக்களுக்கு விடை பகரக் சீதைக்கு விருப்பமில்லை என்றே கருதி ராவணனிடம் சென்று அவ்வாறே மொழிந்து அனுமான அசோக வனத்தை அழித்ததை அவ் வரக்கர் கோனுக்கு அறிவித்தனர். அதைக் கேட்டு அடங்காச் சினங்கொண்ட ராவணன், எண்பதினுயிரம் கிங்கரர்கள, ஜம்புமாலி, மந்திரி களின் மைந்தர்கள் எழுவர், சேனைத்தலைவர்கள் ஐவர், இவர்களை நால்வகைச் சேனைகளுடன் அனுமானை அடக்குவதற்காக ஒருவர்பின் ஒருவ ராக அனுப்பினன். அவர்கள் அனுமானை எதிர்த்

* सत्याकाराः त्रयोदश ॥ மஹாபாரதம்-சாந்தி பர்வ

துப் போர் புரிந்து அனைவரும உயிர் துறந்து அவ்வுலகம் சென்றனர். பிறகு ராவணன் தன குமாரர்களில் ஒருவனான அக்ஷயகுமாரனை அனுப்ப அவனும் அனுமானை எதிர்த்து க்ஷயமடைந்தான். அக்ஷயன் அழிந்ததைக கேட்ட ராவணன் சமாதியில் ஆழ்ந்து அனுமானுடைய நிகரற்ற திறலை அகக கண்ணால் காணலானான். அவரை அடககுவது இந்திரசித்து ஒழிய மற்றெவராலும் கூடாதது என்பதை நன்கறிந்து அம்மஹாவீரனை ஏவி அவனுககும் சில எச்சரிககை மொழிகளை உரைத்திடலானன். "முப்பத்துமுககோடி தேவர்கள் புடைசூழப்பெற்ற மஹேந்திரனையும் விறலழித்துச் சிறையிலிட்ட உனக்கு நான் கூறவேண்டியது ஒன்றுமில்லை. ஆயினும இவ்வனுமானை யாரோ சாமானயன் என்று எண்ணுவது கூடாதெனறே தோன்றுகிறது. நம சேனைகளைக் கூட்டங் கூட்டமாய்க் கொல்லுமிவன் அவைகளிலும் மிகுந்த படைகள் ஒன்றையும் பற்றியிருககிறானில்லை. இவன் கொண்ட ஆயுதமோ, நம் வெளிககதவின் தாழ்ப்பாளே; உயிர் மாய்க்கும பெருங்கருவி யாதொன்றையும் இவன் கையாளவுமில்லை. பெருங் காற்றும் இவன வேகத்தைப் பெற்றிருககக காணோம். அககினியே இவன் என்றாலும் அதை அணைப்பதற்கு உபாயங்கள் உண்டு. ஆனல் இவனிடத்தில் எது பலிதமாகும் என்பது நிர்ணயிககத் தக்கதாயில்லை. ஆதலால் உன் அஸ்திரப் பயிற்சியையும் தேக பலத்தையும் நீ துணையாககககொண்டு

இத்தகை திறல் பெற்றிருப்பவனை ஜயித்தல் வேண்டும்; சென்றுவா" என்றான். * இந்திரசித்தும் மிக வணக்கத்துடன் தன் தந்தையை வலம் வந்து ஆசிகளைப்பெற்று ரதாரோகணம் செய்து அனுமான் இருக்குமிடம் சென்று அவர் முன்னே தோன்றினான். 'ராமன் திருக்கண்களைப் போல, இவன் கண்களும் தாமரை இதழ்களை ஒத்திருந்தன' என்று கவி கூறியிருப்பது ராவணன் மைந்தனிடத்தில் அவருக்குள்ள கௌரவத்தைக் காட்டுகின்றது. மலர்க் கண்களன்றோ அழகுக்கும் ஆற்றலுக்கும் அறிகுறிகளாகின்றன? அனுமானை அவன் உள்ளபடி உணர்ந்து பிரும்மாஸ்திரத்தால் கட்டிக் கீழே தள்ளினான். அஸ்திரக்கட்டின் மகிமையையறியாத ராட்சஸர்கள் அனுமானைக் கயிறுகளைக்கொண்டு கட்டவே, மற்றோர் கட்டைப் பொறுக்காத அவ்வஸ்திரம் அனுமானை விட்டு அகன்று போயிற்று. இதை அனுமான் உடனே உணராவிடினும் இந்திரசித்து அதையறிந்து விசாரமுற்று மெள்ள அனுமானை இழுத்துவரச் செய்து தன் தந்தை முன் கொண்டு சேர்த்தான்.

'கைலயங்கிரியை நாம் ஆட்டியபோது நம்மைச் சபித்த ஸாக்ஷாத் நந்திகேசுவர பகவானோ அல்லது பாணாசுரனோ இவன?' என்று அனுமான் தேஜஸைக்கண்ட ராவணன் ஐயமும் அச்சமும்

* गणशोऽच्यवन्ती என்று பாடத்தைக்கொண்டு பொருள் கூறுவதே ஏற்புடைத்து. வியாக்கியானங்களில் गणशोचि, अवन्ति என்றும் विश, अलसारं என்றும் பிரித்துப் பொருள் கூறியிருப்பது பொருத்தமற்றதே.

தோன்ற அவரைப் பார்க்கலானான். மணிமகுடம் தரித்த பத்துச் சிரங்களும், தோள்வளைகள் அணிந்த இருபது புஜங்களும் தோன்றப்பெற்று அளவற்ற தேஜஸுடன் ராவணன் வீற்றிருப்பதை அனுமான் கண்டார். "இந்த வீரனுடைய ஆற்றலும் ஆகிருதியும் மூவுலகங்களையும் அவற்றிற்கு இறைவனை இந்திரனையும் காப்பாற்றி ரக்ஷிக்கப்போதுமானவை. ஆனால் அறவழிநடவாது அனைவரையும் அலறச் செய்வதே தன் ஆட்சிப் பேற்றுக் குரியதெனக் கருதிக் கொடுஞ் செயல் புரிந்து கேடுறுகின்றான். இவன் தோற்றமும் தைரியமும் இமையவரும் பெற்றிலர்", என்று வெகு மதிப்புடன் அனுமானும் ராவணனை எண்ணினார்.

ராமாயணக் கதைப் போக்கில் ராவணன் பார்க்கப்படும் போது மிக இழிந்த செயலில் அகப்பட்டு அவன் பிரதாபமெல்லாம் சீதா தேவியின் கற்பொளியால் தேஜஸ் இழந்து காலைச் சந்திரனைப் போல் கலை மழுங்கிக் காணப்படுகிறான். அவனுள்ளிருக்கும் மகத்துவத்தை அனுமானை ஒத்த பெரிய மனப்போக்குடையோரே அறியலாம். சாமான்ய ஜனங்கள் கருத்துக்கு அவன் பெருமை புலப்படாவண்ணம் அவன் பெரும்பாலும் ஓர் அற்பனாகவே வர்ணிக்கப்பட்டிருக்கிறான். வால்மீகிக்குப் பின் வந்த காளிதாஸர்*, பவபூதி, மூராரி போன்ற கவிகள் இதை நன்குணர்ந்து ராவண

* जेतारं लोकपालानां स्वमुखैरर्चितेश्वरम् ।
रामस्तुलितकैलासमरातिं बह्वमन्यत ॥ ரகுவம்சம் 12-வது சர்க்க

னுடைய அளவிறந்த ஆற்றலையும் மனத்துணிவையும் சிலாகித்துப் பாடியிருக்கிறார்கள்.

பாலகாண்டத்தில் தேவர்கள் பிரமனைப் பிரார்த்திக்கும்போது ராவணனுடைய பிரதாபத்தை ஒருவாறு கூறியிருக்கிறார்கள். 'இவன் மேனியின்மேல் கதிரோனும் காய்வதில்லை. இவனடகத்தில் காற்றும் ஓங்கி வீசுவதில்லை. இவனைக் கண்டால் சமுத்திர ராஜனும் அலை ஓய்ந்து அசைவற்றிருக்கிறான். இவன் அழிந்தாலன்றி உலகம் மீட்சிபெற இயலாது' என்றனர். பிறகு நாராயணன் அங்குப் பிரத்யட்சமானார். தேவர்கள் அவரைத் தொழுது "நும்மை நீர் நான்காக வகுத்துக்கொண்டு இம்மானிட உலகில் வந்து தோன்றி ராவணனை வதை செய்யவேண்டும்; ஹ்ரீ, ஸ்ரீ*, கீர்த்தி, இவை உருவெடுத்தனபோல் முறையே விளங்கும் கௌஸல்யை, சுமித்திரை, கைகேயி இவர்கள் வயிற்றில் நீர் ஜனித்தல் வேண்டும்" என்று முறையிட்டார்கள்.

கௌஸல்யை முதலியோர்களுக்கு உபமானங்களாகக் கூறப்பட்ட ஹ்ரீ, ஸ்ரீ, கீர்த்தி என்பன, வெட்கச் சீரையும், செல்வச் சீரையும், புகழ்ச் சீரையும் முறையே குறிப்பிடும். தற்பெருமைக்கும், சுயநலத்திற்கும் பிறரை அடக்குவதற்கும் உபயோக

*ஸ்ரீ: என்பது श्रिञ् सेवायां என்றபடி, ஸேவித்தல் அல்லது பணிவிடை செய்தல் என்பதையே நேர்பொருளாகக் கொண்டது. ஸேவை செய்வதற்குச் செல்வம் இன்றியமையாதது பற்றி செல்வத்திற்கும் ஸ்ரீ என்ற பெயர் அமைந்துள்ளது.

மாகும்படி கெடுத்து அவைகளை ராவணன் உரு மாறிப் போகும்படி செய்தான. 'தற்பெருமை அல்லது மானத்தால் பரதாரத்தைத் திருப்பிக் கொடாமல ராவணனும, அவ்வாறே ராஜ்ய பாகத்தைத் திருப்பிக கொடாமல துரியோதன னும்* உயிரிழந்தார்கள,' என்பர் கௌடில்யர். இத்தகைய மூச்சீர்களும் கேடடைந்ததால், அறம், பொருள. இன்பம இம்மூன்றும் முறையழிந்து போயின. ராவணனைக கொன்று அவைகளை மேலோங்கச் செய்யவேண்டும என்பதே ராமாதி களுககுத் தாயாகப் போகும் கௌஸலையை முதலி யோருககுத் தேவர்கள் தந்த உபமானங்களி லுள்ள உட்பொருள்.

தந்தை சொல கேட்பதே பெருமை என றெண்ணி, 'கானமரும் கலலதர் போய்க காடு றைந்த' ராமன் வெட்கச் சீரையும், தங்கள் சுய நலத்தைக கருதாது தமையனகளுக்குச் சேவை புரிவதே உயர் நலமென்று கொண்ட லக்ஷ்மண சத்ருகனர்கள் செல்வச் சீரையும, தாயுரை கொண்டு தாதை தனககுதவிய ராஜ்யத்தை ராம னுடைய பாதுகைகளுககாககி அவரைப்போல் தானும் சடை தரித்து ஐம்புலன்களை அடககி ஒழுகுவதே புகழென்று கருதிய பரதன் கடைச் சீரான கீர்த்தியையும மீட்டுத் தமகிலே பெறச் செய் தார்கள்.

* मानाद्रावणः परदारान् अप्रयच्छन् दुर्योधनो राज्यांशं च ॥ அர்த்த சாஸ்திரம

சீதா தேவியை அபகரிககு முன் ராவணன் புரிந்த வீரச் செயல்கள் எல்லாம அவற்றிலுள்ள குறைகள் தோன்ருமல ஆற்றலின் மிகையால் ஆச்சரியங்கள் எனவே விளங்கின. சீதையைத் தூககி வந்த பிறகு அவன் ஆற்றலிலுள்ள அழுககுகள் மேலோங்கி யாவரும அருவருப்புக கொள்ளும்படி ஆயின. ராவணன் மனைவி மண்டோதரியே இதைத் தன் புலம்பலில் குறிப்பிடுகிருள். "மூவுலகங்களையும் உம் ஒப்பற்ற பராக்கிரமத்தால் தலை மிதித்து நின்ற நீர் பிறர் மனைவியைக களவாடுவது என்ற இழி செயலுககு எவ்வாறு உடன்பட்டீரோ தெரியவில்லை. நீர் பயமற்றவர் என்றும்மைத் தீர் மானித்து, உம் செயல்களிலுள்ள குற்றத்தைக காணுதிருந்தேன். சீதாபகாரத்தில் முதன் முதலாகப் பியம் என்பது உம் மனதில் குடிபுகவே, நீர் மாயமான் சூழ்ச்சியால் ராமனை வஞ்சித்துச் சீதையை அபகரித்து இங்கே கொண்டுவந்தீர். இந்த பயமே உமககு அழிவுகாலம் வந்துவிட்டதற்கு அருணேதயம்போல் ஆயிற்று. ஐம்புலன்களையும் ஜயித்து, அனைத்துலகங்களையும் ஆளப் பெற்றீர். சமயம் பார்த்திருந்த அப்புலன்கள் உம்மை இவ்வாறு இழிவான நிலைககுக் கொண்டு வந்து நசிககச் செய்தன" என்றனள்.

இவ்விதம் இழிவான நிலையை ராவணன் பெற்றிருந்தகாலத்திலும், அவன் இருப்பு அனுமானுககு வியப்பை அளித்தது. பிரஹஸ்தன் முகமாய்

அனுமான் இயற்றிய குற்றச் செயல்களுக்குக் காரணங்கேட்டபொழுது சீதையைத் தேடும் நிமித்தம் தாம் லங்கைக்கு வந்ததாயும், ராவணனைக் கண்டு பேசுவதற்கு வேறு மார்க்கமில்லாததால் உத்தியானத்தை அழித்ததாகவும், தம்மைத் தாக்கவந்த அரக்கர்களைத் தற்காப்பின் பொருட்டுக் கொன்றதாயும், நேராக ராவணனுக்கே அனுமான் விடையளித்தார். தாம், சுக்ரீவன் அமைச்சர்; அனுமான்; ராமபிரானனுப்ப ராவணனிடம் தூது வந்தவர் என்று தம்மை ராவணனுக்கு அறிவித்து வந்த காரியத்தை விஸ்தாரமாக விளம்பலுற்ரூர்.

ஸ்ரீ ராமாயணத்தில் பக்தரும் மஹாபாரதத்தில் பகவானும் தூது கொண்டார்கள். ஒருவர் 'ராவணோ லோக ராவண:' என்றபடி மூவுலகங்களையும் கதறச் செய்யும் ராவணனுக்கும்; மற்றவர் மக்கள் ஆசையால் மதிக்கண்ணையும், பிறவிப்பயனால் புறக்கண்ணையும் இழந்து நின்ற திருதராஷ்டிர மஹாராஜனுக்கும் தூது சென்று அவர்களை ஒழுங்குபடுத்த முயன்றனர். சீதைக்குத் தைரியம் கூறி அத்தேவியைத் தேற்றும் பொருட்டு அனுமான் தன் பேருருவைக் காட்டி அதைப் பயன்படச் செய்தார். ஸ்ரீ கிருஷ்ணனும் துரியோதனனைத் திருத்துவதற்காக இமையவரும் காண்பதற்கரிய தன் திவ்விய ஸ்வரூபத்தைத் தோற்றுவித்தார். பிறவிக் குருடனை அவன் தந்தையும் கண் பெற்றுக் கண்டுபோற்றிய அச் சொரூபத்தை அத் துஷ்டன் இந்திரஜாலமென்று இகழலானன்.

"குருககளும், பாண்டவர்களும் சமாதான மடைந்து அவர்களுககுப் போர்த்துணையாக வந்த உலக வீரர்கள் உயிர் நீங்கிப் போகாமல் இருப் பதை யாசிப்பதற்காக உமமிடம் யான் வந்தேன். பாண்டவர்கள் என்றும்போல் உமககுப் பணி விடை செய்வதற்கும், அவர்களை எதிர்த்தால் போர் புரிவதற்கும் ஆயத்தமாக இருககிறார்கள். பிறகு உம் சித்தம்" எனறு மிகவும் பணிவுடன் நடு நிலையை நாடிப் பேசினார் ஸ்ரீ கிருஷ்ண பகவான். பகத அனுமானே அவ்வாறு மொழியவில்லை. "இந்த ஊரில உனககு புத்தி புகட்டக்கூடிய நல்லோர் ஒரு வரும இல்லையா?" என்று மிக இரக்கத்துடன் ராவணனுககுச் சீதை சொல்லியதைக கேட்டிருந்த இவர், அப்பதவியைத் தாமே ஏற்றுககொண்டு, அத்தேவி காட்டிய முறையைத் தழுவி, நயமும, பய மும் தோன்ற, வெகு அமரிக்கையாக ராவணனிடம் சில வார்த்தைகளைக் கூறலானார்.

ஆச்ரமத்தில் திடீரென்று காணாமற்போன சீதையை ராம லக்ஷ்மணர்கள் தேடி வருகையில் சுகரீவனுடைய தோழமையைப் பெற்றதையும், வாலியை வதம் செய்து வானர அரசைச் சுகரீவ னுக்கு ராமன் அளித்ததையும், சுகரீவன் பலகோடி வானரர்களைச் சீதையைத் தேடிவர விடுத்ததையும், தாம் கடல் கடந்து லங்கை சேர்ந்து அங்குமிங்கும் பார்த்தபோது அசோக வனத்தில் அத் தேவியைக் கண்டதையும் கூறும்போது, "வாலியை முன்னமே நீர் நன்கறிவீர்; அந்த வாலி ராகவனுடைய ஓர்

அம்புககு வகை சொல்ல முடியாமல் வானுலகம் சென்றான்'' என்று அனுமான் ராவணனுககுச் சொன்னது அவ் வரககன் மர்மங்களை நலிவுறச் செய்தது. வாலி என்று அனுமான் அழுத்தந்திருத்த மாய் மொழிந்தபோது வாலில் இறுகக கட்டித் தன்னை அவன் தொங்கவிட்டுககொண்டு சென்றது ராவணன் நினைவுககு வர*, அவன் அடங்காக் கோபமும் வெட்கமும் கொண்டான். இதற்கு மேல் அனுமான் அவனுககு நல்ல உபதேசம் செய்தது அவனால் சகிக்க முடியவில்லை. அனுமான் கூறிய தாவது: "உம்மை மஹா புத்திசாலி என்று கேள்வியுற்றிருக்கிறேன். பொருள் தேடுவதற்கு தர்மத்தையும தவத்தையுமே சாதனமாக கொண்டவர் நீர், என்பதையும் அறிவேன். அத் தகைமை பெற்ற நீர் எவ்வாறு பிறர் மனைவியை சிறையிட்டிருக்கிறீர் என்பது மிகக வியப்பைத் தருகிறது. ராம லக்ஷ்மணர்களை உள்ளபடி தெரிந்து கொள்ளாமல் அவ்வாறு அபாயமான காரியத்தைச் செய்துவிட்டீர் என நம்புகிறேன். அவர்களைப்பற்றி நான் உமககு உள்ளபடி உபதேசிகக வேண்டியது அவசியமாகிறது. உபதேசம் செய்வதற்குத் தகுதி பெற்றவன் நான் என்பதை நீர் நன்குணர்வீர்.

* கடசததில வாலியை இடுககிச சென்ருன என்று உததர ராமாயணததில இருநதாலும, ராவணனை வாலி, வாலில தொஙகவிட்டு இழுததுச சென்ருன என்றே புராணாநதரஙகளிலும, போஜ சமபுவிலும கூறபபட்டுள்ளது வாலியின வாலைபபறறி அனுமானின அபிபபிராயமே ராவணனை மனதை உறுததி, 'அனுமானின வாலைககொளுததுஙகள' என்று அவன கட்டளையிடுவதறகுக காரணமாயிறறு

முதலாக, ராமதாஸன்* நான்; அவரைப்போல் உண்மையையே தர்மமாகப் பெற்றிருப்பவன். இரண்டாவது, தூதன் என்னும் பதத்தை இப்போது நான் கொண்டிருககிறேன். உள்ளதை உள்ளபடி உரையிட வேண்டுவது நான் கொண்ட கடமையாகிறது. இவ்விரண்டையும விட நான் பெற்றிருககும் விசேஷ யோகயதை வேறென்றும் உண்டு. அது நான் வானரன என்பதே. என் இனத்தார் யாவரும் பொய் என்பதை அடியோடு அறியாதவர்கள். சத்தியமாகச் சொல்லுகிறேன் கேளும். இவ்வுலகங்கள் அனைத்தையும் அவற்றிலுள்ள சராசரங்களையும் அடியோடு அழித்து அவைகளை முன்போல் ஆககும் புகழ் பெற்றவர் ராமன். எல்லாத் தேவர்களுடன் இந்திரன் எதிர்வந்து நின்றாலும, முப்புரமெரித்த முககண்ணன் முயன்றாலும், நான்முகக கடவுள் நாவு அசைத்துத் தடுததாலும், ராமன் கொலலுவதற்குத் தீர்மானித்த ஒருவனையும் உயிர் காத்தல் கூடாததே. ராமன் கோபித்து, லக்ஷ்மணன் கணைதொடுப் பாராயின், அவர் முன நிற்க மஹேந்திரனாலும் மாளாது. உம்போல் உள்ளவர்களைப் பற்றிப் பேசவும வேண்டுமா?'' என்று ராவணனுககுப் பிரும்மோபதேசம் செய்தார் அனுமானென்னும் ஆசார்யர். ० அந்நாளில தசரத மஹாராஜனுககு

*ராம தாஸா எனபதால ராமனுடையமஹததுவததை நனருக அறிநதவா எனறும பொருள கூறலாம். தாஸாகளதாமே பகவானின பரதவததை நனகறியமுடியும!

விச்வாமித்ரர், 'அஹம் வேத்மி', என்று அறிந்து செய்த உபதேசத்திற்கு அனுமான் விரிவுரை கூறினார் போலும்! ராமனால் அறுபடப் போகும் ராவணன் தலைகளில அவ்வுபதேசம் அப்பொழுது ஏருவிடினும, சிறிது காலத்திற்குப் பிறகு அதை நினைந்து ஏககங் கொண்டான். "அந்த வீரனை ராமன் நலிவற்ற நாராயணன் என்பதை நன்கு காண்கிறேன்." என்றவன் பிறகு கூறிய சந்தர்ப்பம உண்டு.

"சீதையை ராமனுககுத் திருப்பித் தந்து அவர் சரணங்களில் விழுந்து அவரை நீர் சரணம் புகக கடவீர். இல்லாவிடின் நீரும் உம் சுற்றத் தாரும் இவ்விலங்கையுமு அழிவடைவது நிச்சயம். சீதையின் தேஜஸால் இப்பொழுதே யாவும் எரியப் பெற்றிருந்தும நீர் அதை உணரவில்லை. உம்மைக கொலலுவது என்பதை நான் ஒருவனே செய்யககூடும். ஆனல் அவ்வாறு செய்வதாக ராகவனே முந்தி பிரதிகஞை செய்துவிட்டார்" என்று சொல்லி அனுமான் தம்முரையை முடித் தனர்.

இவ்விதம் அச்சமின்றி ஐயம் திரிபறப் பேசிய அனுமானுககுத் தகக பதிலளிக்கும் திறமையைப் பெற்றிராத ராவணன், "இவனைக கொல்லுங்கள்" என்று கோபத்துடன் உத்திரவளித்தான். அதற்கு அவன் தமபி விபீஷணன் உடன்படாமல் ராவணனுக்கு நல்லறிவு கூறி அவன் புத்தியைத்

திருத்தினன். "அனுமான் நம்மூரில் வந்து சில சேதங்களைச் செய்தானென்பது உண்மை. அதற்குத் தகக தண்டனைகள் பல சாஸ்திரங்களில் கூறப் பட்டிருககின்றன. இவன் அங்கத்தை உருமாறச் செய்யலாம்; இவனைக் கசையடி அடிக்கலாம்; இவன் தலையை முண்டனம் செய்யலாம் ; ஏதாவது அடையாளமிட்டு அனுப்பலாம் ; தூது வந்தவனைக கொல்லுவது என்பது மட்டும் எககாரணத்திலும் செய்யத்தகாத காரியம்" என்று வினயமும் நயமும் தோன்ற நன்மொழி கூறினன். விபீஷணன் சொல்லியதற்கிணங்கி, "இவன் வாலைக்கொளுத்தித் துரத்துங்கள் ; வாலற்றுத் தன் இனத்தார் இகழ இவன் எங்கிருந்து வந்தானே அங்குத் திரும்பிச் செல்லீட்டும்" என்றனன் ராவணன். அவ்வாறே ஆயிரககணக்கான அரககர்கள் பழந்துணிகளைக் கொணர்ந்து அனுமானுடைய நீண்ட வாலில் சுற்றி எண்ணெயை அதில் பெய்தார்கள். அவர்கள் அனுமான் வாலுக்குத் தீமூட்ட ஆரம்பித்ததை அறிந்த அரககிகள் சீதையிடம் விரைந்து சென்று, "உன்னுடன் பேசிய குரங்கின் வால் பற்றி எரிய அவனை அரககர்கள் எல்லாத் தெருக்களிலும் இழுத்துச் செல்லப்போகிறார்கள்" என்றனர்.

அதைக்கேட்ட சீதை துக்கம் தாங்கமாட்டாமல் அக்னி பகவானைத் தம் மனத்தில் ஆவாகனம் செய்து கொண்டு அவரை வழிபடலானள். தம்முடைய 'பதிசுச்ருஷை, தாம் இயற்றிய தவம்,

தாம் கொண்ட கற்பு, தம் கற்பில் ராமனுக்குள்ள நம்பிக்கை இவைகள் பேரில் ஆணையிட்டு, "ஏ அக்னி பகவானே, என் அனுமானுக்குக் குளிர்ந்துபோம்", என்று பன்முறையும் கூறி, "சுக்ரீவ மஹாராஜன் ஆரியத் தன்மைபெற்றவராயும் சொற்றவறாதவ ராயுமிருந்து என்னை அவர் மீட்பது உண்மையானல் அனுமானை நீர் காத்தல் வேண்டும்" என்று பிரார்த்தித்தாள். அவள் சொல்லியபடிக்கே அக்னி பகவானும் அனுமானுக்குக் குளிர்ந்தார். அவர் வாலிலிருந்து வீசிய காற்று பனிச் சாரல்போல் சீதையின் பேரிலடித்தது அத்தேவிக்குத் தம் மைந் தன் க்ஷேமத்தைக் வாயு பகவான் கூறுவது போலிருந்தது. "பனிக் கட்டியை வால் நுனியில் வைத்துக் கட்டி விட்டார்களா என்ன?" என்று எண்ணிய அனுமானும், தம் அன்னை சீதையின் பிரபாவம் அது என்பதை அறிந்துகொண்டார்.

அனுமான் அரக்கர்கள் இழுத்த இழுப்புக் கெல்லாம் உடன்பட்டு, பட்டணத்தையும் அதன் அரண்களையும் நன்றாகச் சுற்றிப்பார்த்தார். பிறகு அவர் தம் வாலில்பற்றி எரியும் அக்னிபகவானுக்கு விருந்தளிக்கக் கருதித் தம் கட்டுக்களை அறுத்துக் கொண்டு சுற்றியுள்ள அரக்கர்கள் அனைவரையும் கொன்றார். வரிசைப்படி லங்கையிலுள்ள மாளி கைகள் எல்லாவற்றையும் எரித்துக் கடைசியாக ராவணன் அரண்மனையையும் தம் வாலில் பற்றி எரி யும் நெருப்பிற்கோர் ஆகுதியாக ஆக்கினார். தர்மம்

பேசிய விபீஷணன் வீடு நீங்கலாக மற்றெல்லாம் எரிந்துபோயின. அவைகளில் வசித்த ஸ்திரீகளும் குழந்தைகளும் "இவன் யாரோ தெரியவில்லையே; விஷ்ணுவின் தேஜஸோ, பிரமனின் கோபமோ, யாரிட்ட சாபமோ இவ்வாறு யாவற்றையும் எரித்து அழிக்கின்றதே!" என்று கூச்சலிட்டு அழுதார்கள்.

அனுமான் தம் வாலில் பற்றி எரியும நெருப்பைக கடல் நீரில அணைத்தார். பிறகு சீதை இருககுமிடத்தையும் அத் தேவியையும சேர்த்து எரித்து விட்டோமா என்று சந்தேகத்தைப் பெற்று அடங்காத் துயரமடைந்தார். தம்மைத்தாமே வெறுத்தார். கோபத்தால் ஏற்படும் குற்றங்களை நிந்தித்தார். "அற்பத் தீங்கை ராவணனுககு உண்டுபண்ணக் கருதி ராம காரியத்தை வேரற்றுப் போகச் செய்தோமே" என்று பரிதவித்து உயிர் துறக்க உத்தேசித்தார்! "இலங்கை எல்லாம் எரிந்து போயும சீதை யாதொரு தீங்கின்றி விளங்குகிறுள்" என்று வெகு வியப்புடன் கூறிய சாரணர்கள் வார்த்தை அவர் காதுகளில் விழ அவர் மன மகிழ்ச்சியடைந்தார். "என்னைச் சுடாத நெருப்பு சீதையை எவ்வாறு சுடும்?" என்று எண்ணி, மறுபடியும் அத் தேவியைத் தரிசித்து "நல்லவேளை உம்மைத் திரும்பவும் சேவிககப் பெற்றேன்" என்று சொல்லித் தொழுது திரும்பிச்செல்ல விடை கொடுத்தருளும்படி வேண்டினர். "வாயு, கருடன், நீ ஆகிய மூவரே கடல் கடந்து இங்கு வரக்கூடியவர்

கள்; எல்லா வானரர்களும் ராம லக்ஷ்மணர்களும் எவ்வாறு லங்கையை யடைந்து போர் புரியப் போகிறார்கள்? இதற்கென்ன சமாதானம்?" என்று சீதை வினவினாள்.

"எனனிலும் கீழுள்ளவர்கள் சுகரீவ சன்னதியில் இலலை. உயர்ந்தவர்கள் ஏவப்படுவார்களா? நான் இங்கு வர ஏவல பெற்றிருப்பதே என தாழ்மையை உணர்த்துவதாகும். ஆகையால் நீர் எவ்வித விசாரமும் கொளள வேண்டாம். ராம லக்ஷ்மணர்கள் இருவரையும் என் இரு தோள்களிலும் எழுந்தருளப் பண்ணிககொண்டு நான வெகு சீககிரம் இங்கு வருகிறேன். சுகரீவன் முதலிய மற்றோர்களும் ஒரே தாண்டலில் லங்கை வந்து குதிப்பார்கள். போய் வருகிறேன" என்று சீதையைத் தண்டனிட்டு விடைபெற்றுக் கடலைத் திரும்பக கடந்து, தன் இனத்தாரிருககும் வடகரை வந்தடைந்தார். "கண்டேன் சீதையை" என்று சுருக்கமாகச் சொல்லி அங்கிருந்த அனைவர்களையும் ஆனந்தக கடலில் முழுகச் செய்தார்

"அசோக வனத்திலே சிம்சுபா விருக்ஷத்தடியிலே, அரககிகள் காப்பிலே, கற்புககிருப்பிடமான சீதாதேவி கண்ணீர் பெருக இருப்பதைக கண்டேன். ராமனுடைய முயற்சிகளும், சுகரீவனுடைய பரபரப்பும் சீதையின் ஒப்பற்ற சீலத்தால் பயன் பெற்றனவாயின. *உத்தம ஸ்திரீகளின் ஆசாரத்

* இஙகு, स महात्मा कृतागसं எனறு பாடம காணபபடுவது முறறிலும தவறு सुमहत्सा कृतागसं எனறே இருககவேணடும

தைப் பின்பற்றி ராகவனிடத்துள்ள அளவற்ற பக்தியையும் உணர்ந்து மஹத்தான அபராதம் செய்த ராவணனை உயிரழிக்காமல் பொறுமையாயிருக்கிறாளேயன்றி, சீதை தன் தவத்தால் இவ்வுலகத்தைக் காக்கவும், கோபத்தால் இதை எரிக்கவும் கூடியவளே. அவள் செயலை அக்கினியும் இயற்றல் அரிது. திரும்பவும் நாம் அனைவரும் சென்று அத்தேவியை மீட்டுக்கொண்டு ராம சுக்ரீவர்களைத் தரிசிப்பதே ஏற்புடைத்து என்று எண்ணுகிறேன்'' என்றனர் அனுமான். அங்கதன அனுமான் மொழியை மிகவும் ஆதரித்துப் பேசினன். ஆனல் ஜாம்பவான் "அவ்வாறு செய்ய நாம் அனுமதியடைந்தவர்கள் அல்லர். சீதையின் விருத்தாந்தத்தை ராம சுக்ரீவர்களுக்குத் தெரிவித்துவிட்டு அவர்கள் நியமனப்படி நடப்பதே நலம்'', என்று கூறினர். அதற்கு அனைவரும் சம்மதித்துக் கடற்கரையை விட்டுக் கிளம்பி, மதுவனம் வந்து அதைக் கண்ணுற்றார்கள்.

வாலியின் காலம் முதல் ஒருவரும் அணுகாமல், சுக்ரீவன் மாமன் ததிமுகனல் காக்கப்பட்ட அவ்வனத்தில், அனுமான், அங்கதன் இவர்கள் அனுமதியைப் பெற்ற அனைத்துள்ள வானரர்களும் நுழைந்து ததிமுகனையும் அவனுக்குத் துணையாக வந்த காவலர்களையும் அடித்து, அவமானப்படுத்தி, அங்கிருந்த மதுவை அள்ளி அள்ளிக்குடித்தார்கள். ராகவனுக்கு நயன மதுவான சீதையை அனுமான்

கண்ட உத்ஸவததை அனைவர்களும் கொண்டாடி அவ்வாறு மதுவைக குடித்துக குதூகலித்துக கூத் தாடினுர்கள். ஆனால் அனுமான் ஒருவர் மட்டும மதுவிலககை அனுஷ்டித்தாரெனறு ஏற்படுகிறது. ஸ்திரீபுமானகள் சிற்றின்பத்தை நாடும்போது மது பானம செய்யும் வழககததை மஹாகாவ்யங்களில வர்ணிககத் தகுந்த ஓர் அம்சமாக அணியாசிரியர் கள் கூறியிருககிறுர்கள.* ஆதி கவியான வாலமீகி சீதையைக் கண்ட பேரின்பத்திற்கு உரியதோர் அங்கமாக அதை வர்ணித்திருப்பது மிகச்சிறியதே. அந்தச் சம்பவங்களை எல்லாம் ததிமுகனிடமிருந்து கேட்டறிந்த சுகரீவன் வெகு சந்தோஷமடைந்து, "தென்திசை சென றவர்கள் திருமபி வந்துவிட்டார் கள். சீதையைக கண்டது அனுமானே. அனை வரும் அருந்துவதாக இத்ததிமுகர் சொல்லிய மது விருந்தே இதற்குத் தககதோர் அடையாளம" என்று ராம லக்ஷ்மணர்களிடம சொல்லி யாவரும் ஆனந்தமடைந்தார்கள.

இதற்குள் ததிமுகன் திரும்பி மதுவனம் சென்று "சுகரீவ மஹாராஜன் உங்களை உடனே தம்மிடம் வரும்படி உத்தர விட்டிருக்கிறுர்" என் பதை அங்கதன முதலியோருககு மிக வணககத் துடன் அறிவித்துத் தான் செய்த தடையை மன்னிககும்படி வேண்டினுன். அங்கதன் வானரர் களை "உங்களிஷ்டம் எவ்வாறு?" எனறு கேட்க

* उद्यानसलिलक्रीडा मधुपान रतोत्सवैः । எனறுளள

மஹாகாவயததின இலககணததை தணடியின காவயாதாசததில காணக.

அவர்கள் "உமது ஆணையே எங்களிஷ்டம" என்று மறுமொழி கூற,யாவரும் கிளம்பி ஆகாய வழியாய் ராமாதிகள் இருக்குமிடம வந்து குதித்தார்கள்.

அனுமான ராமனை அடிவணங்கி "தவமும் கற்பும மேலோங்கப் பெற்றவராய்ச் சீதாதேவி ஜீவித்திருக்கிறார்" என்று விண்ணப்பம் செய்தார்.

அத்தேவி படும் துக்கத்தையும, ராவணனைக கண்டஞ்சாத துணிவையும, அசோக வனத்தில் எதையும் கண்ணுறாமல் ராமனையே மனத்திலிட்டுச் செய்துவரும தவத்தையும் நனகெடுததுக கூறி ராமனை மன மகிழச் செய்தார். பிறகு அவள் அடையாளமாகச் சொன்ன சிறு காக்கை விருத்தாந்தத்தையும், கன்னததிற்குப் பொட்டிட்ட வரலாற்றையும் அவள் கூறியபடிக் கூறித் தாம் ஓர் ஏகஸந்தக்கிராஹி என்பதைக் காட்டலானார். சீதை தந்த சூடாமணியை ராமன் கரத்தில் சமர்பித்தார். வைதேஹியின் ஹ்ருதயமே அவளை விட்டுப் புறப்பட்டு ராமனிடம் வந்ததோ என இருந்தது. 'அதை ராமன் மார்பில் வைத்துக் கட்டியணைந்து சீதையையே ஆலிங்கனம் செய்து கொண்டவர்போல் ஆனந்தமடைந்து தம் திருக் கண்களை மூடிக்கொண்டார்' என்பர் காளிதாஸர். "இம்மணியைக காணும்போது என் தந்தையே ஜனக மஹாராஜாவுடன் எதிர்வந்து நிற்கின்றரோ என உணர்கிறேன். இதை என் தந்தைககு யகஞ காலத்தில் மிகவும் சந்துஷ்டனான மஹேந்திரன் அறிந்து கொடுத்தான்; அதை அவர் கைகேயி தேவிக்கும் கொடாமல் சீதைககுக் கல்யாண காலத்

தில் சேர்க்கக் கொடுத்தார். அதை அவள் சிரத்தில் அணிந்தபோது அது மிகச் சிறப்புடன் விளங்கிற்று. அதைக்காணும் எனக்குக் கன்றைக் கண்ட பசுவைப்போல் மனம் துடிக்கின்றது. இனி நான் ஒரு முகூர்த்தம் கூட சீதையைப் பிரிந்து இருக்கமாட்டேன்.” இவ்வாறு, தன் பரத்துவத்துக்கு உரிய கௌஸ்துபமணியே சூடாமணியாக உருவெடுத்து வந்ததெனக் கண்ட ராமன் லக்ஷ்மணனிடம் சொல்லி மனமுருகினார்.

பிறகு அனுமானை நோக்கி “மஹானுபாவ! நீ சீதையைக் கண்டதால், நானும், மஹா பலசாலியான லக்ஷ்மணனும் புத்துயிர் பெற்றோம்; எமது ரகு வம்சமும் தரும நெறி தவறாமல் நிலை பெற்றுள்ளது. உனக்கு யாது தருவன் யான்? உன்னைத் தழுவிக்கொள்ளுவதே நான் இப்பொழுது பெற்றிருக்கும் பெரும் பொருள். * இவ்வாறு மற்

* கரவதம செயத ராமனேப பிராட்டி ஆலிஙகனம செயது கொணடதாக ஆரணய காணடததில சொலலபபட்டிருககிறது ஆனல பிராட்டியை அபபொழுது பதிலுககு ராமன அணேநது கொணடதாகக கூறப்பட்விலலே. இபபொழுது 'சீதையைக கணடேன' எனறு அமுது மொழி கூறிய அனுமானே ராமன கட்டிககொணடு அககுறையைப போககிஞர போலும

एष सर्वस्वभूतो मे परिष्वङ्गो हनूमतः ।
मया कालमिमं प्राप्य दत्तो ह्यस्य महात्मनः ॥

எனற சுலோகததில, कालमिमं प्राप्य எனபது இநத உலலேகததைப போஷிககினறது कान्तोदन्तः सुहृदुपनतः सङ्गमात् किंचिदूनः। நணபரால கொணடுவரபபட்ட காதலி செயதிககும அவளுடன சேரபபெறுவதறகும உளள விததியாசம மிகச சொறபம எனபா காளிதாஸா

ரூேர் மனதாலும் எண்ணுதற்கு அரிய காரியத்தில் ஏவப்பெற்று அதைப் பகதியுடன் பரிபாலித்து வந்த நீயே புருஷோத்தமன்," என்று திருவுக்கு இருப்பிடமான தம் மார்போடு அனுமானைச் சேர்த்துக கட்டிக்கொண்டார். லோகமும் வேதமும் தமகென்றே தந்திருந்த புருஷோத்தம பதத்தில் அனுமானை அனறு முடிசூட்டிப் பகதனும் பகவானும் ஒன்றேயான தத்துவம் என்பதை உலகங்களுக்கு உணர்த்தினார் ஸ்ரீ ராமன்.

சாநதி: சாநதி: